# "கந்தர் லீலையின் காட்சியும் - -
# கந்தா சஷ்டி விரத மகிமையும் - -
# சோமாஸ்கந்த மூர்த்தியின் பெருமையும்"



கார்வார்-ஸ்ரீ பு. சுப்பையா பிள்ளை.

ஓம் :

# "கந்தர் லீலையின் காட்சியும் - கந்தர் சஷ்டி விரத மகிமையும்- சோமாஸ்கந்த மூர்த்தியின் பெருமையும்"




திருமந்திர நகர்,

கார்வார். பு. சுப்பையா பிள்ளை

எழுதியது.



முதற் பதிப்பு 1000



[illegible] நிலையம்,

தூத்துக்குடி.

1941



[விலை அணா பத்து.

இந்நூல் கிடைக்குமிடம் :—

நூலாசிரியர்-கார்வார்,

ஸ்ரீ பு. சுப்பையா பிள்ளை,

நெ. 11, சிவன் கோயில், வடக்கு ரதவீதி,

தூத்துக்குடி.

3-6

# சிறப்புரை

ஆண்டவன் ஒருவனே. அவனது நெறியும் ஒன்றே. உலகம் பலவிதம். அதற்கேற்ப, ஒருமையைப் பன்மையாக இயக்குவது இயற்கை. இயற்கையிலுள்ள இந் நுட்பத்தை இங்கே விளக்க வேண்டுவதில்லை.

இறைவனுக்குரிய பல திருப்பெயர்களுள் முருகன் என்பதும் ஒன்று. இத் திருப்பெயர் மிக மிகத் தொன்மை வாய்ந்தது; பொருளாழ முடையது.

முருகனை, ஆறுமுகமும் பன்னிரண்டு தோளும் உடையனாய், வேற்கரத்தனாய், வள்ளி தெய்வயானை சமேதனாய்க் கோழிக் கொடியுடன் மயில்மீது இவர்ந்து காட்சி யளிக்கும் மூர்த்தியாக வழிபடுவது தொன்றுதொட்ட வழக்கம். முருகன் உருவங்களை உள்ளவாறே நம்புவது பௌராணிகம். பௌராணிகத்தைத் தத்துவக் கண்கொண்டு பார்த்தல்வேண்டும். பார்த்தால் நுட்பங்கள் இனிது விளங்கும்.

இந் நூற்கண் பௌராணிகமும் தத்துவ நுட்பங்களும் விளங்குதல் கண்டு மகிழ்வெய்துகிறேன். இரண்டும் பொலியும் முறையில் தலைமையுரை நிகழ்த்தியுள்ளார் கார்வார்-ஸ்ரீ. பு. சுப்பையா பிள்ளை அவர்கள். இத்தகைய பேச்சே இக் காலத்துக்கு வேண்டற்பாலது.

காலத்துக்கேற்ற தொண்டைத் திறமையுடன் ஆற்றிய அன்பர் பிள்ளையவர்கட்கு எனது நன்றி யுரியதாக. முருகன் திருவருள் இருமைக்குந் துணை.

சென்னை,
30-11-41.

திரு. வி. கலியாணசுந்தரனார்.

முருகன் தமிழ்க் கடவுள். முருகு என்பது அழகு, இளமை முதலிய பல பொருள்களைக் குறிக்கும் ஒரு தமிழ்ச் சொல். அவ்வழகிய சொல்லே அன் விகுதி பெற்று முருகன் என்று ஆயிற்று. தமிழர்கள் தாங்கள் வழிபடுங் கடவுளுக்கு முருகன் எனப் பெயர் வைத்து அழைத்தனர். தமிழர்கள் ஆதியில் இயற்கையி னூடே இறையைக் கண்டு வழிபட்டு வந்தனர் என்பதற்குக் குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகனைத் தங்கள் தெய்வமாகக் கொண்டிருப்ப தொன்றே சான்றாகும்.

முதற் பெருங் கடவுளாய முருகன் புகழைப் பாடிப் பெறற்கரிய பேறு பெற்றோர் பலர். அப்பெரியோர் வழியைப் பின்பற்றி, கார்வார் - திரு. பு. சுப்பையா பிள்ளை அவர்கள் முருகன் புகழைப் பாடி யிருக்கிறார்கள். அப் புகழ்மாலையே இச்சிறு நூலாகும். இதில் முருகன் வரலாறும் முருகன் அடியார் வரலாறும் ஒருவாறு கூறப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது.

உலகம் உய்ய வந்து உதித்த ஒரு திருமுருகன் இப் புகழ்நூலை ஏற்றருளி, திரு. பிள்ளையவர்கட்கு நல்வாழ்வு அளிப்பானாக.

சக்தி நிலையம்,<br>மயிலாப்பூர்,<br>3-12-41.

நாரண-துரைக்கண்ணன்.

3-6

சில காலமாக நம்மிடை கலியுக வரதன்-முருகன் அருட் சேர்விரித்து வரும் காரவார்-ஸ்ரீ. பு. சுப்பையா பிள்ளை அவர்களுடைய சொற்பொழிவுகள் மக்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டிருக்கின்றன. அதிலும் சென்ற 10-3-40-ல் நம் நகர் ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி பஜனை மடத்தின் வெள்ளி விழாவின் தலைவராக விருந்து அவர்கள் ஆற்றிய தலைமை யுரை "பொருள் நிறைந்தது-பொன் ஏடுகளிற் பொறிக்கத் தக்கது. நூல் வடிவில் ஒவ்வொருவரிடமும் இருக்க வேண்டுவது'' என்று அன்பர்கள் பலரும் உணர்ந்தனர். அவ்வழி அவர்களுடைய முயற்சியில் தோன்றிய இந்த அரிய ஏடு எல்லோராலும் நன்கு வரவேற்கத் தக்கதாகும்.

இதில் இடம் பெறும் ஸ்ரீ பிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாறு படிப்பினைக் குரிய பலவற்றைக் கொண்டதாக விருக்கிறது. ஸ்ரீ முருக பக்தர்களுடைய நித்திய பாராயணத்திற்குரிய கவசம் முதலியனவும் இறுதியிற் சேர்த்திருப்பதும்,-வழிபாட்டிற்குரிய முருகனது திருவுருவப் படங்கள் இடையிடை இலங்குவதும் யாருக்கும் பெரிதும் பயனுடையதாக விருக்கும்.

நம்மவர்களுக்கு ஒரு உதாரண புருஷராக விளங்கும் ஸ்ரீ, பிள்ளை அவர்களுடைய சமரஸப் பெரு நூற்களும் மேலும் தொடர்ந்து இது போன்ற ஏடுகளில் தோன்ற இறையருள் முன்னிற்பதாக.

கு. லெ. கந்தசாமி பிள்ளை,
கௌரவ நீதிபதி, தென்னிந்திய பாங்கு
நிர்வாக உறுப்பினர், ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி
மகமை பரிபாலன சங்கத்தின் செயலாளர்.

தூத்துக்குடி,
31-10-41.



காார்வாரின் கட்டளை மதிப்புரை தருமாறு; மறுக்க முடியாததுதான். ஆனால், மதிப்புரை தருவதற்கு அறிஞர் நடு நான் எம்மட்டு! என்றாலும், கட்டளையை நிறைவேற்றுவது கடன். எனவே, தருகின்றேன்.

கிழக்கி லுள்ளவர்களுக்கு இந்த நாளில் மேற்கி லுள்ளவர்களிடம் மோகம் அதிகம் மேலே தேயத்தொரு மேதை கண்ட உண்மை என்று சொன்னால் தான் எதையும் ஏற்றுக் கொள்வார்கள். அதனால், மேல் வரையின் எல்லைகாட்டி-கிழ்த் திசையின் உதயதாரையை இனிகே விளக்குகின்றார் கார்வார். அவ்வகையே ஆன்ம ஒளிக் வழிகாட்டும் பழங்காலத்துப் புராணங்களின் உத்தேசத்தை நிறைவேற்றி விடுவதில் மிகச் சரியாகவிருக்கிறது ஸ்ரீ பிள்ளை அவர்கள் சொற்கள். இத்தகைய விளக்கங்கள் தாம் மக்கள் உள்ளத்தில் நேர்மை ஒளி வளர்ப்பன.

2/106, சாமிநாய்க்கன் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.
3—12—41.

ஸி. பி. ஆனந்தம்.

# முகவுரை

கலியுக வரதன் என்று கொண்டாடப் பெற்றுவரும் ஸ்ரீ முருகப் பெருமானது சீர்கள் சொல்லில் விரிக்க-கேட்க எவரையும் பரவசமடையச் செய்யும். 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்றார் அப்பர் சுவாமிகள். அதற்கிணங்க பல இடங்களிலும் யான் செய்துள்ள பிரசங்கங்களிற் சிலவற்றைப் புத்தக வடிவில் வெளியிட வேண்டுமென்று அன்பர்கள் பலர் விரும்பினர். அவ்வழி முதலாவதாக வருவது இந்த நூலாகும்.

இது தூத்துக்குடி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி பஜனை மடத்தின் வெள்ளி விழாவில் 'கந்தர் லீலையின் காட்சியும்-கந்தர் சஷ்டி விரத மகிமையும்-சோமாஸ்கந்த மூர்த்தியின் பெருமையும்' என்னும் பொருள் பற்றி நிகழ்த்தப்பெற்ற எனது தலைமை உரையின் சுருக்கமேதான். எனவே, இதற்கு அந்தத் தலைப்பையே சிறிது நீளமாக விருந்தாலும் தரலாயினன்.

நூல் முறைகளுக்கேற்ப, தலச் சிறப்பு முதலிய தலைப்புகளில் வகுத்து, புராண சித்திரமும் அதன் தத்துவமும் இன்றைய அறிவிற்கேற்ற விளக்கங்களுடன் தர முயன்றுள்ளேன். அத்துடன், மறந்துபோய் வரும் சமய சின்னங்களையும்-விரத அனுஷ்டானங்களையும் பற்றி மக்கட்கு நினைவுறுத்துவதிலும் தக்க சான்றுகளை விவரித்திருக்கின்றேன்.

இறுதியில், மக்கள் ஒவ்வொருவரும் சிவகுமாரனை நினைந்து-தினம் தியானித்து வழிபடுவதற்கு உதவியாக ஆறுபடை வீடுகளில் கோயில் கொண்டருளும் முருகனது நிலைகளையும்-ஆறுமுக நயினர்-பாலசுப்பிரமணியர் வடிவுகளையும் கொண்ட படங்களையும்-நித்திய பாராயணத்திற்கு உகந்த முக்கியமான கந்தர் சஷ்டி கவசம் முழுவதும்-அலங்காரம் அனுபூதி-புகழ் இவற்றுள் சிலவும்-சோடச நாமங்களும் சேர்த்துள்ளேன்.

அன்பர்கள் பிழை திருத்திப் பயன்படுத்திக் கொள்வார்களாக.

தூத்துக்குடி,<br>20-11-41. } கார்வார், பு. சுப்பையா பிள்ளை.

# பொருளடக்கம்




ஸ்ரீலஸ்ரீ வீர-சுப்பைய ஞானதேசிகேந்திர சுவாமிகள்.

# கார்வார்-ஸ்ரீ. பு. சுப்பையா பிள்ளை வாழ்க்கை வரலாறு

(அன்பன் எழுதியது.)

கார்வார் என்ற பதத்தைக் கண்டதும் எந்த மடத்திலே கார்வார் என்று கேட்கத் தோன்றுகிற தல்லவா ? ஆம், அப்படி ஒரு மடத்திலும் கார்வார் இல்லை. நமது சென்னையிலுள்ள ஆனந்தா சிரமத்தைப்பற்றி நீங்கள் அறிந்திருப்பீர்கள். அந்த ஆசிரமத்தில் குருமூர்த்தமாய் சில வருடங்கள் முன் வரையும் எழுந்தருளி யிருந்த ஸ்ரீலஸ்ரீ வீர-சுப்பைய ஞான தேசிகேந்திர சுவாமிகள் கொடுத்த பட்டம் அது. திருமந்திர நகர் என்று சிறப்பித்துக் கூறப்படும் புண்ணியதலம் தூத்துக்குடி. அங்கு 'சற்சன சபை'யின் அமைச்சராய் ஸ்ரீ. பிள்ளை யவர்கள் வெகு காலம் இருந்து ஆற்றிய அரும் பணியின் பெரும் பெற்றி சுவாமிகளின் உள்ளத் தைக் கவர்ந்து விட்டது. அவ்வளவுதான்! பின்னர் **கார்வார் பு. சுப்பையா பிள்ளை** என்று சென்ற இருபத் தைந்து ஆண்டுகளுக்கு மேலாக வழங்கி வரலாயிற்று.

இத்தகைய ஒருவர்தான் சென்ற வாண்டில் நிகழ்ந்த தூத்துக்குடி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி பஜனை மடத்தின் வெள்ளி விழாவின் தலைமைப் பதவியை அலங்கரித்து நின்றவர். அதுகால் அவர் ஆற்றிய பெருஞ் சொற்பொழிவு மக்கள் உள்ளத்தை வெகுதூரம் கவர்ந்துவிட்டது. ஆகவே, அன்பர்கள் அந்தச் சொற்

மொழியின் நுண்பொருள்களை நூல் வடிவில் ஆக்கிவிட முனைந்தனர். அதில் ஸ்ரீ பிள்ளை அவர்களின் வாழ்க்கைக் குறிப்பும் இருத்தல் மிகப் பொருத்த மல்லவா! அத்துடன். அது பலருக்கும் பெரிதும் பயன் தரும்.

## 2. பிறப்பு

சைவமும்-தமிழும் தன் இயலாகக் கொண்டது திருநெல்வேலி ஜில்லா. அங்கு, சுகாதார தலங்களுள் (one of the Sanitoriums) ஒன்றான கோவிற்பட்டிக்கும்-தென்கோடி துறைமுகத் தலமாக விளங்கும் தூத்துக்குடிக்கும் இடையில் 'எப்போதுவென்றான்' என்னும் ஒரு சிற்றூர் உண்டு. அதில் வேளாண் குலத்து உயர் குடிப்பிறப்பு இப் பெரியவர். ஸ்ரீ புன்னைவனத்தின் அருட் தோன்றல்; ஸ்ரீமதி குருவம்மையாரின் பெருந் தவத்து வந்தவர். கி. பி. 1891-ம் ஆு நவம்பர் மாதம் 25-ந்தேதி புதனன்று பிற்பகல் இரண்டு மணி யளவில், பலன்தருங் கோட்கள் யாவும் தக்க விடங்களில் அமர-மின நல் ஓரையில் உதித்தார்.

சித்தி புருஷர்களின் லக்ஷணங்களைப்பற்றிக் கூறும் ஏடுகளிலே "வான் மீனம் ஈராறுள் வகையான வில்லு-மேடம்-கன்னி-துலாம்-மீனம் என வருமிந்த ஐந்துமே தரைமீது வழங்குகின்ற சித்திக்காகும்" என்று காணப் பெறுகின்றது. அவ்வாறு சித்திக்குரிய உயர்தரத்து மீனங்களுள்ளும் உடுக்கணங்களும் பொருந்த சித்தியின் விசேஷம் மேலும் உயரத்தக்க தாகின்றது. அவ் வகையின், பான்மதிக்கு இனித்த தாரை இருபான் ஏழுள்ளும் உத்திரம்--அஸ்தம்-சித்திரை-ஸ்வாதி—மூலம்-உத்திரட்டாதி-ரேவதி-அசுபதி-பரணி என வரும் ஒன்பதிலே ஒன்றாக வாய்த்தல் வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கின்றனர்.

இதற்கிணங்க நமது தலைவரும் தோன்றியது மீன நல் ஓரை; நாளும் உயர்ந்த ஒன்பதுள் முதற்கண் வரும் உத்திரம் ஆகும். சோதிட நூல் ஆய்ந்த நல்லோர் இதர கோள் நிலைகளின் பலங் கொண்டு இப் பெரியவரின் எதிர்காலச் சிறப்புக்களைக் காணக்கூடு மாதலால், இராசிச் சக்கரம் கீழே தரப்பட்டிருக்கிறது.

| | | | |
|---|---|---|---|
| லக்னம் | | ராகு | |
| குரு | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | சூர்யன் புதன் சுக்-கேது | | சந்திரன் செவ்வாய் சனி |

### 3. படிப்பும்—வளர்ச்சியும்

பிறப்பு சிற்றூர் ஆகலின், படிப்பிற்காக தூத்துக்குடிக்கு இப் பெரியவர் அவருடைய சிறு பிராயத்து வர நேர்ந்தது. பள்ளிப்படிப்பு ஓரளவையோடு மேலே செல்ல முடியாததாக நின்று விட்டது. **"பள்ளிப் படிப்பினிலே** மதி சென்றிடவில்லை" என்றார் கவி-பாரதியார். ஆம், அழகான பதிப்பேடுகளைத் (Well Bound Volumes) தாங்கி-அரண் ஒத்தகட்டிடங்களிலே-ஆடும் விசிறிகளின்

கீழ் காலரிகளிலே சிறையிருந்து-மேடை மீது தன் பணி ஆற்றி நிற்கும் புலவரின் (Proffessor) மொழி களிலே திகைப்புற்றுக் கிடக்கும் இந்நாளைய பள்ளிப் படிப்பில் பாரதி போன்றவர்களுக்கு ருசி இருக்குமா? ஏன், விண்ணும்-மண்ணும் தாண்டிச் செல்லும் பர பரப்பு மிகுந்த உள்ளங்களுக்கு ஏற்ற அறிவு போஷணை அங்கு ஏது? அவ்வகையில், அது சரிதான்-பொதுவாக, மிக மேதைகளை-பெரியோர்களை-பெரு நாவலர்களை-மகான்களை-கவி சிரேஷ்டர்களை இயற்கை என்னும் சர்வகலாசாலைதான் உலகினர் பொருட்டு உற்பத்தி செய்து கொண்டிருக்கின்றது; அது அதன் கடமை களில் தலைமை வாய்ந்தது. அதுபோல நமது பெருஞ் சொற்புலவர்-கார்வார்-ஸ்ரீ பிள்ளை யவர்களும் இயற் கைக் கல்விச்சாலையில் தான் அதிகம் தேர்ச்சி பெற்றது.

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவர்க்கு
எழுமையும் ஏமாப் புடைத்து."

என்ற வள்ளுவர்தம் வாக்கிற் கிணங்க-பூர்வ புண்ய பல விசேஷம் சத் புருஷர்களின் தொடர்புகள் மிகச் சிறுபோதிருந்தே ஸ்ரீ பிள்ளை யவர்களுக்கு இருந்து வந் தது. அவர்களிட மிருந்து பெற்ற வேதாந்த நுண் பொருள்கள் அனந்தம். தனியிடத் திருந்து பல பொழு தும் பொருள் நிச்சயத்தைப்பற்றிய உண்மைகளின் சிந்தனையிலேயே மூழ்கிக் கிடப்பர். அதன் பயனாகத் தெளிவுபெற்ற பெரியார் என்னலாம். சாதனா புருஷர் களின் சம்பந்த விசேஷத்தால் தெளிவுகளின் படியுள்ள அனுபவத்திற்கும் ஏதுவாயிற்று. இவ்வகையின், கலி யுக வரதனான ஸ்ரீ முருகப் பெருமானின் அருளில் உயர்ந்தவராக இன்று இலங்குகின்றார்.

## 4. தொழில்

சிறு பொழுதிருந்தே வர்த்தகத் துறைகளில் சம்பந்தங் கொண்டிருந்தார். சிலகாலம் பிறரைச் சார்ந்தும் - பின்பு தனித்தும் தொழில் நடத்தி வரலானூர். இடையில் சென்னை - சோமசுந்தரம் மில்ஸ் லிமிட்டட்டில் பொருளாளராக (பொக்கிஷதாரர்) விருந்தார். பொன் வணிகத்திலும்-நவதானிய வியாபாரங்களிலும் தக்க அனுபவ முடையவர். இவ் வகையில், பிற நாடுகளின் சம்பந்தம் இவருக்கு இருந்து வந்திருக்கின்றது. இவை யெல்லாம் ஜீவனத்தின் பால் வருவன.

## 5. பொதுப் பணிகள்

சிறு வயது முதலே உயர்ந்த லட்சியங்களைக் கொண்ட இவர் பொதுப் பணிகளிலும் தனது விசேஷ கவனத்தைச் செலுத்தி வந்திருக்கின்ருர், அவ் வகையின் தமது பொருளையும் பொழுதையும் வெகுவாக ஈடுபடுத்தி வருகின்ருர்.



“சற்சன சபை”யின் அமைச்சராக விருந்து அவர் ஆற்றிய பணிகள் மிகவும் குறிப்பிடத் தக்கன வென்னலாம். இந்த சபை வேதாந்த மதக் கொள்கைகளைக் கொண்டது. விரிந்த நோக்குடைய இந்த அரிய ஸ்தாபனம் பல அறிஞர்களை உற்பத்தி செய்திருக்கின்றது.

இவரது பரந்த உள்ளத்தின் நேர்மை பொதுநல ஸேவைகளிலும் ஈடுபடுமாறு செய்தது. “ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வதேசி ஸ்டோர்ஸ்’ லிமிட்டெட்டின் வளர்ச்சிகளில் தம் கவனத்தைப் பெரிதும் செலுத்தி வந்தார்.

வருங்காலத்தில் நம் நாட்டை அலங்கரிக்க விருக்கும் இற்றை நாட் சிருர்களின் நலத்தில் மிகவும் பரிவு கொண்ட ஸ்ரீ பிள்ளை அவர்கள் தமிழ் ஆரம்ப இலவச

தேசியப் பாடசாலையின் அதிகாரம் பெற்ற மேற் பார்வையாளராக அரியன ஆற்றி வருந் தொண்டிற்கு தேசம் கடமைப்பட்டது

வர்த்தகத் துறையில் தான் ஒருகால் குமாஸ்தா வாக விருந்ததை மறந்து போகாமல், முதலாளியாக அல்லது அந்த அந்தஸ்திற்கு உயர்ந்தும் அந்த உழைப்பு உலகின் பெருநலங் காத்து நிற்க முன்வந்த பெற்றி பெரிதும் பாராட்டத் தக்கது. இந்திய வர்த்தக குமாஸ் தாக்கள் சங்கமும் தங்களுடைய தலைவர் என்று மதித்து போற்றி வர முனைந்து இப் பெரியவரை தங்கள் சங்கத் தின் தலைவராக ஏற்றுக்கொண் டிருப்பது மகிழ்ச்சிக் குரியது. இதை யெல்லாம் விட பிள்ளை யவர்களின் மனோ தர்மம் மக்களின் வாழ்க்கை நலனைக் கோரிற்று. எனவே, 'நல்வாழ்க்கைக் கழகம்' என்றொரு ஸ்தாப னத்தை நிறுவலாயினர். இவ்விதம் பொதுநலப் பணி களில் விரிந்து விரிந்து வந்து அவரது இதய நலன் இறைவன் பணிக்கென ஒரு இடந்தர லாயிற்று. அவ் வகையின் 'சுவாமி ஆறுமுக நயினர் அன்னபிஷேகக் கட்டளை மகாசபை'த் தலைவராய்த் தன் கடனாற்றலானர்.

## 6. சொல் ஆற்றல்

இவரை ஒரு நாவலர் அதாவது வாக்கு வல்லமை யுடையவர் என்னலாம். காந்த சக்தி வாய்ந்த மனிதர் (Man of Magnetic Powers) என்று சொல்லும்படி எவரையும் வசப்படுத்தும் ஆற்றல் இவரிடம் இயற்கை யாகவே உண்டு. இந்த அரிய சக்திக ளெல்லாம் நல்ல வழிகளிலேயே அபிவிருத்தி பெற்று, இன்று உலகம் அனுபவிக்கும்படி தெய்வத் திருவருளும் கூடிச் சிறந் திருக்கின்றன.

இவ் வகையில், பல ஸ்தாபனங்களின் ஆண்டு விழாக்களிலும் தலைமைப் பதவியை அலங்கரித்துச் செய்துவரும் சொல் ஆற்றல் உலகு அறியும். இத்துடன், புராணங்களிலே மிகவும் கடினமானது தணிகை புராணம் என்பர்; அதனை எடுத்து ஆளும் சக்தியில் உயர்ந்திருப்பது அதிசயிக்கத் தக்கது. அதிலும் புராண சித்திரத்தை விரித்து வரும் அவரது பௌராணிகப் பெற்றியை எல்லோரும் மிகவும் போற்றி வருகின்றனர். இவ்வரும் பெற்றிக்கு தூத்துக்குடி, ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி மகிமை பரிபாலன சங்கத்தின் ஆதரவில் நிகழ்ந்து வரும் சஷ்டி விழாவில் இடங் கிடைத்து வருவது குறிப்பிடத் தக்கது.

தமக்குள்ள ஆராய்ச்சி அறிவின் பெருவளம் தக்க ஒரு சமரச நிலையைப் பரப்பி வருவதற்கு உதவுகின்றதென்னலாம். இமய முதல் குமரி வரையும் உள்ள எல்லா முக்ய தலங்களிலும்-கடல் கடந்த இலங்கை-பர்மா முதலிய பிரதேசங்களிலும் சுற்றி யிருக்கிறார். சென்ற விடங்க ளெங்கும் சுத்த சன்மார்க்க சமரஸ நிலை பரப்பி வந்திருக்கிறார்.

இவை யெல்லாம் கவனிக்கையில், பொதுநலத்திற் கென்றே தோன்றிய தோற்றம் என்று ஸ்ரீ பிள்ளையவர்களைக் கூறலாம். ஆயினும், தோற்றத்தின் உத்தேசம் நன்கு நிறைவேறுவதற்குப் பெருந் துணையாக இவரது வாழ்க்கைத் துணைவியார் ஸ்ரீமதி இராஜலக்ஷ்மி அம்மையார் இருந்து வருவது குறிப்பிடத்தக்கது, இவர்கள் இருவரும் இவ்வையத்து நீடு வாழ-எல்லாச் சிறப்புக்களையும் குறை நீங்கப்பெற்று மிளிர, எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுதல் ஒன்றே நம் கடன். சுபம்!

ஓம் :

# "கந்தர் லீலையின் காட்சியும்-
# கந்தர் சஷ்டி விரத மகிமையும்-
# சோமாஸ்கந்த மூர்த்தியின் பெருமையும்"

[தூத்துக்குடி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி பஜனை மடத்தின் வெள்ளி விழா 10–3–40-ந் தேதி யன்று நடைபெற்றபோது, அவ் வைபவத்துக்குத் தலைமை வகித்த கார்வார், ஸ்ரீ பு. சுப்பையா பிள்ளை அவர்கள் "கந்தர் லீலையின் காட்சியும்-கந்தர் சஷ்டி விரத மகிமையும்-சோமாஸ்கந்த மூர்த்தியின் பெருமையும்" என்பது பற்றி நிகழ்த்திய தலைமைப் பேருரைச் சுருக்கம்.]

## விநாயகர் துதி

"திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவமாய் நம துள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம்"

## தோற்றுவாய்

சிவநேசச் செல்வர்களே ! செல்விகளே !!

திருமந்திர நகரம் என்னும் இப் பெருந் தலத்து சைவத்திரு மன்னும் இப் பேரவையில், அமிழ்தின் சுவையினும் தமிழின் சுவையே இனிதெனக் கொள்ளும் கேள்விச் செல்வராகிய அறிஞர் குழாம் மிகுந்துள்ள இந்த ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி பஜனை மடத்தின் வெள்ளி

விழாவின் தலைமைப் பதந் தந்து என்னைக் கௌரவிக் கும்உங்கள் பேரன்பு பாராட்டத் தக்கதே. மிகச் சிறிய ஞன யான் அப் பதவிக்குரிய கடமைகளை ஆற்றுந் திற முடையே னல்லன். எனினும், வானவர் பகை வென்ற சிவ குமாரன்-வள்ளி மணாளன் பேரருளும்-உங்கள் நகை முகத்தேனும் தரும் துணைவலிகொண்டு முனை கின்றேன்.

## தலச்சிறப்பு

அன்பர்களே, 'திருமந்திர நகரம்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றது இவ் வுலகில் இத்தல மொன்று தான். ஆதியில் சிவன்—உமையவட்குத் திருமந்திரத்தை உப தேசித்தருளி, இரகசியப் பொருளாய் நின்றுலவுகின்ற திவ்ய க்ஷேத்திரம் இதுவேயாதல் சிறப்புடை இச் சீரிய பெயர் வழங்கிவர லாயிற்று. இதற்குரிய சான்றுகள் பல வுள்ளன. அவை நம் நாட்டு அருட்பெரும் புலவர் கள்—பரமனையே பரவிப் பாடும் பக்தர்கள் ஆகிய இன் னோரன்ன பெரியோர்களுடைய வாய் மொழிகளி னின் றும் காணத் தக்கதாக விருக்கின்றன. கவிகளின் வாக்கு ஒரு பக்கல் இருக்க, புவிமகளும் இயற்கைத் திருவில் ஒரு முதல்வன் அன்றொரு பொழுது உமைய வட்கு அருளிய திருமந்திரத் தலமிது வென்பதற்கு அழியாச் சான்றினைத் தன்னகத்துக் கொண்டிருக்கின் முள். உவரி நீர் அருகில் இடம்பெறும் ஏனைத்தலங் களை நீங்கள் கவனித்திருக்கலாம். அங்கெல்லாம் இயல் பிலுள்ள அலைகளின் பெரு முழக்கம் ஈண்டு காண்கி லேம். அத்துடன், 'கற்பக தரு'-'சோதி விருட்சம்' என் றெல்லாம் சிறப்பு வாய்ந்த பனைக் கூட்டங்கட்கு ஒரு முக்கிய நிலையம் இது. அவை மிக நெருக்கமாய் இங்கு இன்றும் நிறைந்திருக்கின்றன. எனினும், அவற்றின்

ஓலைகள் ஒன்றுடனென்று உராய்வதால் உண்டாகும் ஓசையும் மற்றைத் தலங்களில் உள்ளன போன்று இங்கு இல்லை. எனவே, பேரொலி முழங்கும் பெருநீர்ப் பரப்பும்-இந்தத் தருக்களும் அவைகட்குள்ள இயற்கையை விட்டுப் பரமமோனத்து இருப்பதேன்? இது சிந்தனைக் குடைய உள்ளத்து எழத்தகுந்த கேள்வி தான்! திருமந்திர உபதேச வைபவ நிகழ்ச்சிக்குச் சாதகமான மோன நிலையை இயற்கைத் தேவி ஈசன் நினைவின்படி இயைந்தே அமைந்து துணை செய்தனள் என்பது இனிதே புலனுகின்ற தல்லவா!

இந்த நிலையை கவிகள் தங்கள் வாய் மொழிகளில் நாமெல்லாம் அறியும்படி சான்று தீட்டிச் சென்றிருக்கின்றனர். முன்னம் இத்தலத்தே கவிகள் திலகமாய் விளங்கிய வரகவி-வீரபாண்டியப் புலவர் என்னும் சங்கர மூர்த்திப் புலவரைப் பற்றி நீங்கள் அறிந்திருப்பீர்கள். அவர் திருச்செந்திலில் உறையும் குகன் அருள் பெற்றவர். இத்தலத்து கோயில் கொண்டருளும் அம்மை-பாகம் பிரியாள் பேரில் பாடிய பிள்ளைத் தமிழில்,

"கருமந்தியுங் கருங்கவியும் வெள்ளைப் பெருங்கவியுங்
கருங்கரடியும் கடல் கொண்டென
வகண்ட படைகொண்டு நடைகொண்ட
காகுத்த ராகுத்தனு

ரொருமந்திர மநுமன்றன் முனியம்ப மண்குயவ
ரொப்பமிடு மொலி யொடும்பச்,
சோலை யொலியுந் திரையின் வேலை யொலியும்
பெரிதொலிப்பவை மறைப்ப வதனுல்

வருமந்தமுகில் செங்கை யமை யென்றமைப்ப
மண்மனை யோசை பனையோசையு
மாறிட்ட வன்றைக்கு மின்றைக்கு மாருதியும்
வாரிதியும் வாய் புதைக்குந்

திருமந்திர நகர்வந்த வருமந்த செல்வியே
செங்கீரை யாடி யருளே
தேகநிணுக பூண கஞர்பாகமே
செங்கீரை யாடி யருளே"

என அவ் வுண்மையைப் பொறித்துள்ளார். அதில், மற்ருெரு விசேஷம் குறிப்பிடத்தக்கது. பச்சோலை ஒலி-திரையின் வேலை ஒலி இவை இரண்டுடன் மண் குயவர் ஒப்பமிடும் ஒலியும் சேர்த்து விட்டிருக்கின்ருர் அருட்கவி. ஏன்? அவர் காலத்திற்கு முன் முதலே இங்கு குயவர் குழு இல்லை போலும்! மேலும் அவர், "............தத்திய கடற்றிரை முழக்கா நகர்க் கிறைவி சப்பாணி கொட்டி யருளே" என்றெல்லாம் தலத்தின் மோன நிலையைக் கூறுவதோடு நில்லாமல், இந் நிலைக்கு ஒரு எல்லையும், "..............தெற்கோடு வடக்கு மோர் யோசனை விசால நீள மென்றும் வாய் திறவாமல் கட்டி விட்ட..............." என்று குறிப்பிடுகின்ருர். அதன் மேல் அவருக்கு எல்லா முடைய என் அம்மைக்கு ஒரு இல்லாமையைச் சூட்டித் துதி செய அவா துள்ளிக் குதிக்க, அவ் வகையின் இயற்கை வைத்துள்ள சான் றினை, "...........எழுபனை யொடலை குயவரு மில்லாத தன்றி மற்றில்லாத தொன்றில்லை யெல்லாச் சிறப்பு முண்டு..................................பொன்னூச லாடி யருளே" எனக் குறிப்பிடுகின்ருர். "திருமந்திர முறை செல்வி" எனச் செங்கீரைப் பருவத்தும், "............... மந்திர மிந்தப் பதிக்கல்லான் மற்றைப் பதிக்கில்லை யால்" என அம்புலியாடற் பருவத்தும் திருமந்திர விசேஷத்தினுல் உயர்ந்த திருத்தலம் இது வென்று மிக விளக்கமாய்க் கூறுகின்ருர். இதன் மேல் வருகைப் பருவத்தில்,

"சரவணையிற் கிடந்த சிறுவன்றனைச் சென்றெடுத் தொன்ருய்ச் சேர்த்து முலைப்பால் கொடுத்து விடைப் பாகன் கரத்தில் அளித்த மந்திரப்பதி" என்கிருர்.

## கலியுக வரதன்

அதில், ஆறுமுகமாய் வந்த வரலாற்றை அபயம்-அபயம் என்று அமரர்க்காக இரங்கி ஐந்து முகத்தோடு அதோ முகமும் சேர்த்து ஒரு திரு வுருவில் உற்ற பெற்றியை மிக அழகாகச் சேர்த்து விடுகிருர். கலியுக வரதனுய்—சிவபரனுக்குக் குருபரனுய்-ஆயினும், அப்பரனுக்கு வேறலாத அந்தப் பரனேயாய்-பரனுர் தம் முழு நிலையிற் கொண்ட அருட்திருக் கோலம் பற்றியதே எனது பொருளாக விருக்கும்.

"சாதி மதம் சமயமுதல் சங்கற்ப விகற்ப மெலாந் தவிர்ந்து போக ஆதி நடம்புரிகின்ரு னருட்சோதி என களித்தான்" என வரும் அருட்பெருஞ் சோதி தனிப் பெருங் கருணை-திருவருட் பிரகாச வள்ளலார் திருவாக் கின்படி, ஜாதி-மதம்-கொள்கை-மொழி என்னும் எவ்வித பேதங்களு மின்றி எல்லாம் ஒன்றெண விளங் கும் வேதாந்த - சித்தாந்த - சமரச - சன்மார்க்கத்தைப் போற்றுதலையே கடப்பாடாகக் கொண்ட இம் மடத் தின் பெயரும் அதுவே யாதலால், அறுமுகவன்றன் பெருமணம் விரித்தல் யார்க்கும் இனிமையே தரு மென்று எண்ணுகின்றேன். எவ்வகை பேதங்களுமின்றி என்றும் இளமை அழகுடன் இருக்கும் பெற்றியைக் குறிப்பது இம் மூர்த்தமே யாகும். மன ஆறுதலுக்கு மக்களின் தெய்வமும் இதுவே. இன்னுன் பெருமையும் சீர்த்தியும் கந்த புராணத்து பரக்கக் காணலாம். அதன் கண்ணுள்ள சில பல குறிப்புக்கள் தாம் அன்னுன் தாள்

வணங்கி நான் இங்கு சொல்லப் போவது. ஏன்? விரி வஞ்சுதல் விதியாகும்.

ஆறு முகங்களுடன் இலங்கும் ஐயன் மக்கள் வீடு கண்டு ஆறுதல் (சாந்தி) இன்பத்துத் தோய்தற்கு அருள் செய்கின்ருன் என்ருேம். அன்பர்களே!

புகழ் பாடி ஏத்திய அருணகிரி நாதருக்கு அவனது திருமுகங்கள் ஆறும் தனித்தனி திருவிளையாடற் குரிய தாய்த் துலங்குகின்றது, மயிலேறி விளையாடியது - ஈச ருடன் ஞானமொழி பேசியது-அடியார்கள் வினை தீர்த் தது-குன்றுருவ வேல் வாங்கியது-மாறுபடு சூரரை வதைத்தது-வள்ளி நாயகியை மணம் புணர்ந்தது ஆகிய ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு முகத்தைக் கற் பித்து விடுகின்ருர். இவ் வகையின், அறுமுகவனின் வரலாறு யார்க்கும் எளிதிற் புரியும் வண்ணம் பொறித் துள்ளார். அத்துடன் ஈசனின் முழு நிலையதான முரு கனை நமக்குத் தந்து விடுகின்ருர்.

மிகப் பழய காலத்திருந்தே முருகப் பெருமானது திவ்ய லீலைகளையும்-புராண வரலாறுகளையும் ஆராய் ந்து அறிவதன் கண், நம்மவர்க்கு ஒரு தனி ருசியும்-இனிமையும் இருந்து வருகின்றது. நமது வாழ்க்கை களைத் தூய்மை செய்து-உயர் நிலையில் நிறுத்தி உறுதி பெறுவதற்கு முழு முதற் கடவுளாகிய முருகனது சரித் திரம் பற்றிய உணர்வு பெரிதும் உதவியாயுள்ளது. நினைப்பின் வண்ணமே நாம் நிலைத்து வருகின்ருேம். உள்ளத்தளவே மக்கள் உயருகின்றனர். ஒருவர் உள் ளம் தூய்மையாற் சிறக்க அவர் யாவரினும் உயர்ந்தவ

ராகின்றார் ; எண்ணுவ யாவும் எளிதில் எய்தப் பெறு கின்றார். இது கொண்டே

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியராகப் பெறின்"

என்றார் நம் வள்ளுவர் பெருந்தகையும். யாது பாவித் திடினும் அதுவாகி நிற்கும் பெற்றித்து ஆகலான், களங்கமற்ற நெஞ்சொடு நேசிக்குமொன்றினை நாம் அடையப் பெறுவோம். 'What we love that we have' என்பது மேலைதேயத்தொரு மேதையின் கருத்து. அவ் வழி மக்கள் தூய்மையிற் சிறக்க சிந்தை செலுத் தத் தகுந்த ஒன்று முருகனது அரிய வரலாறுதான் இன்று நம் முன் உரியதாக விருக்கின்றதெனக் கூற லாம். எனவே, அதனைக் காணுவோம்.

## ஆடல்—பாடல்

சிருஷ்டியின் சித்திரத்து ஆடல் ஒளி (Light) எல் லையிலும்—பாடல் ஒலி (Sound) எல்லையிலும் வரும் ஒளி காட்சிக்குட்பட்டது ; ஒலி காட்சிக்கு அப்பாலா யது—ஆனால் கேள்விக்குரியது. கேளா-காணு (unheard and unseen) ஒலி. ஒளி—நிறைவே நாத-பிந்துக்களாய் தோற்ற-ஒடுக்கங்கட்கான பெரு நடனத்தைச் சதாவும் புரிவன. ஒலி-ஒளி வடிவின் திருநடனம் சிருஷ்டியின் கிரமத்து வரும் இயற்கையே. இந்த இயற்கைச் சித்தி ரத்தை இயற்கையின் தலையிலேயே வைத்து விடுகின் றான் விஞ்ஞானி ; யாவும் இயற்கைச் சுழல் என்பது அவன் சித்தாந்தம். அதன் மேற் செல்ல-எட்ட அவ னாற் கூட வில்லை. இந்த இயற்கைத் திருநடனத்தின் மூலமான முதற்பெரு நடன மூர்த்தத்தின் அளப்பரிய- என் ? கருதவுமரிய-ஆனால், கருதுவார்க் கெளிய வொரு

பெற்றியை ஞானி தன் அனுபவத்தில் கண்டு கொள்கின்றான். இப் பெரிய ஒரு முழு முதலைக் குறிக்கோளாகக் கொண்டார் அனைவரும் உய்யுமாறு அதுவே ஆடலிலும்-பாடலிலும் இயற்கை வழி கருதுவார் தம் கருத்துப் போல காட்சி தந்தருளுகின்றது. அந்த அருட்கோலங்கள் பலவாயினும் அவை யாவும் ஒன்றே. இந்த அரிய உண்மையை "ஈசனே யவனுடலான மதலையாயினன் காண்-ஆசிலாவவனறு முகத்துண்மையாலறி நீ-பேசிலாங்கவன் பரனோடு பேதகனல்லன்-தேசுலாவகன் மணியிடை கதிர் திறம்போல்" என வரும் அனுபூதிமான்களின் வாய் மொழிகளாலும் அவற்றின் பேதமற்ற ஆடலை இனிது விளங்கும். ஏனெனில், முருகன் திருவிளையாட்டிற்கும்-சிவனுக்கும் ஆடலிலும் எத் துணை பேதமும் இல்லை யென்பது போற்றப்பட்டது, "பேதமற்றதென்பதுடன் மற்றோர் பெரிய விசேஷமும் உள்ளது. 'ஈசனே அவனுடலாய மதலையாயினன்" என்பதில் சிவனார் தம் லீலைகள் அறுபான் நான்கினும் இறுதியாய லீலையே முருகனது திவ்ய தோற்றம் என மிக வியக்தமாக வெளியிடப் பெற்றிருக்கின்றது. ஐந்து முகத்துள ஈசன் தனது லீலைகளின் ஈற்றில் ஆறுமுகத்துடன் இலங்கும் மதலையாய்க் காட்சி தருகின்றான். ஏன், இது தான் அந்த ஒரு முழுமுதலின் முழு உருவைக் குறிக்கும். ஐந்து முகத்தோடு அதோ முகமும் கூடிய முழு முதலின் முழுத்தோற்றம் அறுமுகத்துப் பெருந்தேவனாகும். அது யாவருள்ளத்தும் உறைந்து அருளும் கலியுக வரதன் என நாம் போற்றுவதற் குரியதாக விருக்கின்றது.



இந்த வரதனை ஆடிப் பாடி அனவரதமும் துதித்து உய்யலாம், ஆடலும் பாடலும் உயர்ந்த அழகுக் கலை

களாக நம் முந்தையோர் மதித்தனர். அழகே முருகன். அம் முருகனைக் குறித்த ஆடலும்-பாடலும் அழகுக் கலைகள் என்னல் மிகப் பொருத்தமே. பிற ஒன்றின் கலப்புமின்றி தானே தனித்து இயங்கவல்ல நம் தமிழ் இயல்-இசை-நாடக மென மூவகைத்தாய் தெய்வப் பெற்றியில் அழியாச் சிறப்பை அடைந்துள்ளது. ஆடல் - பாடல் என்னும் அழகுக் கலைகள் ஏன்? தெய்வக் கலைகள் இன்று போல் வெறுங் கூத்து-கண் காட்சி-பொழுது போக்கு ஆகவின்றி தெய்வ வழிபாட்டிற் குரியனவாக-அல்லது தெய்வ ரகசியங்களை மக்கள் மனத்தில் பதிப்பனவாக மிளிர்வனவாம். அவ் வகையில், அதன் பலன் -அளவிடற்கரியது. இம்மை-மறுமைப் பயன்களுக்கும்-துன்பமே தொடராத இன்பப் பெற்றிக்கும் - இனிப் பிறவாத முக்திப் பேற்றிற்கும் வழியாக அவை பெரிதும் பயன்படுத்தப் பெற்றன, அதற்குரிய அருள் மூர்த்தம் முருகனே எனக் கொண்டு சமயங்களும் இடமளித்துப் போற்றுகின்றன, "ஆடுவதும் பாடுவதும் ஆனந்தமாக நின்னைத்—தேடுவதும் நின் அடியார் செய்கை பராபரமே" என்றார் நம் தாயுமான சுவாமிகள். அது போல, காவடி தூக்கி ஆடி முருகனை வழிபட்டு வருதல் நம் உலக வழக்கு. தமிழ்த் திருநாட்டில் உள்ள திருத்தணிகை - பழநி-திருப்பரங் குன்றம் - குன்றக்குடி - கழுகுமலை - திருச்செந்தில் முதலிய தலங்களில் பக்த கோடிகள் காவடி தூக்கி ஆடிப் பாடி பரவுவதை இன்றும் காணலாம். இந்த நிலையில் ஒரு தனி உற்சாகமும் - உருக்கமும் உண்டாகின்றது. இன்பம் கூட என்னலாம். ஒரு முறை காவடி செலுத்தும் பணி ஆற்ற எனக்கு வாய்த்தது. வானத்து உச்சியில் செங்கதிர் ஊரும் பொழுது-நண் பகல் ஒரு மணி இருக்கும்.

வெயிலின் உக்ரம் உச்ச ஸ்தாயியில் இருக்கின்றது. செந்திற் பதியின் கடற்கரை மணல் மேடு -ஸ்ரீ ஷண் முகன் சந்நிதி. சாதாரண நிலையில் எவரும் அந்த மணற் சூட்டை அஞ்சுவர், அன்பர்களே, முருகன் காவடி தோளில் இடம் பெற்றிருக்கின்றது; இதய வெளி அவன் உலவுகின்ற அருட்கோட்ட மாயிற்று. அவ்வளவுதான்! உடலைப்பற்றிய நினைவு இல்லை; நான் -நான் என்னும் விருத்தியும் நழுவிற்று; எனது - எனது என்பதும் மெல்ல விடை பெற்றுக்கொண்டு விட்டது. செயல் மறந்த நிலையில் தாங்கற்கரிய மணற்சூடும் என் பால் செயலற்ற தாயிற்று. அதனால் என்ன செய்ய முடியும்! சொல்லில் விரிக்க முடியாத ஒரு வகை இன் பம் என்னை விழுங்கிக்கொண்டு மேலே நிகழவேண்டிய வற்றைச் சரியாய் நிகழ்த்திற்று என்று மட்டுமே கூறத் தக்கது.

இது முருகன் அருட்பெற்றி; இனி 'நான்' 'நான்' எனப் பிரதாபித்து வரும் வெல்லற்கரிய ஒன்று இதய வெளி யெங்கணும் தன்னரசு நாடு செய்திருக்கும் நிலை யின் அனுபவம் கொஞ்சம் அனுதாபத்துடன் கவனிக் கத் தக்கது. காவடி செலுத்திவிட்டு ஐயன் அருட் கோயிலிலிருந்தும் திரும்புகின்ற பொழுது-மணி நான்கு இருக்கும்; மாலை வேளை நெருங்கிக் கொண்டிருக்கின் றது; கதிர்ச்சூடும் குறைந்துகொண்டே யிருக்கும் நேரம் தான்; ஆயினும் ஏன்ன! இதுகால் எனது நிலையை என்னவென்பது! மாலை இளங்கதிர் - இதன் சூடு தாங்க முடியவில்லை; வெந்நீர் பொறுத உடல்! ஆம், காவடி ஒரு பாரமாகத் தோன்றிற்று; உடல் களைப்பி னால் இடை யிடை நிழல்கண்ட இடங்களி லெல்லாம் தங்கித் தங்கிச் செல்ல நேர்ந்தது. உணர்ச்சி மிகுந்த

உடல் கெஞ்சவே செய்யும்! இந்தப் பரிதாப நிலை கண்டு நடுநிலை உள்ளம் இரங்கவேண்டும். பார்த்தீர்களா? சாதாரண எல்லையில் நமக்குள்ள எளிமையும்—முருகனது அருள் எல்லையின் வசத்து நமக்குரிய வலிமையும் மிக விளக்கமாகத் தெரிகின்றதல்லவா!

எனவே, ஆடல்-பாடல் பரமனைக் கருதிப் பரவும் வழியாகும். ஆடல் கீழ் ஸ்தாயி; பாடல்மேல் ஸ்தாயி. அதாவது முன்னதினும் பின்னது இறை நிலையின் மிக அருகில் இருப்பது. பாடலின்றி ஆடலில்லை. இசையற்ற ஆடல் நிகழாது. இசைதான் ஆடலாக ஆகின்றது. ஆடல் காட்சிக்குரியது; பாடல் காட்சிக்கு அப்பால் கேள்விக்குரியது. காண்பது ஒளி - கேட்பது ஒலி. ஒலியின்றி ஒளியில்லை. ஒலியே ஒளியாய்ப் பாய்கின்றது. ஒலி-ஒளி நிறைவான ஒரு பொருளைப் பரவ-அடைய ஒலி-ஒளிகள் வழியா லன்றிக் கூடாது. ஒலி-அதாவது இசை என்பது பாட்டு; ஒளி-அந்த இசைக்கேற்ற ஆட்டு. பாட்டு இன்பம் ஆடலிற் செலுத்தும். பாடலும்—ஆடலும் பரமனைப் பரவி பரம மோனம் என்னும் இன்பப்பேறடைந் துய்வதற் கேற்றன. இது யார்க்கும் எளியது; இயற்கை நெறிகளில் வருவது. இந்த உண்மைகளை முன்னைப் பெரியவர்கள் நடந்து காட்டி யிருக்கின்றனர். சமய முதல்வர்களும் உயர் தரத்து இசை பாடிப் பரவினர். இவர்களின் இசைச் செல்வம் அழியாப் புகழ் கொண்டது. தெய்வமணம் கமழும் அந்த இசை இன்பம் இறை நிலையின் பேற்றை ஒருவருக்குத் தரும். இசை இன்பத்துத் தன்னை இழந்து விட்ட நிலை செயன் மறந்து ஆட்டத்துச் செலுத்தும். ஆட்டம் என்பது பரம மோனச்சுழல்; சிருஷ்டியின் சுழல்களுக்கு மூலமானது; அதீதமானது. அப்பெரிய

நிலையின் முழுமுதல் இறை-உயர்தரத்து 'வாயாரப் பாடுந் தொண்டரினத் தகத்தான்' என்றவாறு பாடும் தொண்டர் இனங்களின் அகத்துத்தான் கோயில் கொண்டுறைகின்றது. சுருங்கக் கூறின், ஆடல்-பாடல் வீடு பேற்றைத் தரும் என்னலாம். நம் தெய்வத் திரு நாட்டின் ஆடல்—பாடல் நிகழ்ச்சிகளை மேலை நாட்டினர் கடந்த பல காலமாகக் கவனித்து வந்திருக்கின்றனர். அவர்கட்கு இப்பொழுது தான் இதன் கண்ணுள்ள உண்மையை ஒருவாறு உணர்ந்து வருகின்றனர். ஆயினும், விஞ்ஞான அறிவு அதற்கு அப்பாலான—தெய்வ எல்லையின் ரகசியங்களை அறிய முடியா. தெய்வ எல்லையின் ரகசியங்கள் சொல்ல—எழுத வொண்ணுதவை.

## முருகன் திருநாமங்கள்

அத்தகைய ஒன்று - முழுமுதல் அதன் அருள் வடிவு முருகன் என்றோம். ஒருநாமம்-ஒருருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரக் கணக்கில் திருநாமம் இசைத்தல் தவறில்லை. நாம - ரூபங்களிலேயே ஊறிக் கிடக்கும் விருத்தி நாம-ரூபங்களை விழைதல் இயல்பே. அவ்வழி எம் முதல்வருக்கும் கணக்கிலாத நாமங்கள்-அந்த நாமங்களுக்கேற்ற வடிவுகள் அனந்தமாய்க் கொள்கின்றோம். அவை ஒவ்வொன்றும் அவன் ஆடற் சித்திரங்களின் அரிய வரலாறுகளை ஆதாரமாகக் கொண்டன.

முருகன்–குமரன் - ஆறுமுகன்-சுப்பிரமணியன் - கார்த்திகேயன்-கந்தன்-விசாகன்-குருநாதன்-இளையோன்-வேலன் - சரவணன்-சிவகுமாரன் - சுவாமிநாதன்-குகன்-மாயோன் மருகன்–ஒருகை முகனுக்கு இளையோன்-உமை சிறுவள்-வள்ளி மணு

ளன்-குழகன்-சிலம்பன் - சூர்பகைவன்-சுரேசன்-சேந்தன்—தமி ழன்-முத்தமிழோன்-தமிழ் இறைவன்-முழுமுதற் கடவுள் என இன்னும் பல புலவாம். இவை முழுமுதல் இறைவர்க் குரிய ஒவ்வொரு பெற்றியை இனிது விளக்கி நிற்கும்.

'முருகன்' என்னும் சொல்லை இசைக்கும் பொழுதே ஏன், நினைக்கும் பொழுதே ஒருவகை இன்பம் ஊற் றெடுத்து உள்ளமிசை பெருகுகின்றது. அந்தச் சொல் லின் பொருள் இயல்மணம் - என்றும் பேரிளமை - நிறைந்த பேர் அழகு. ஆம், பொருளை உன்னும் பொழுதே மனதைக் கவருகின்றது. கட்புலனுதி ஐந் திணுக்கும் இனித்த ஒரு பெருநிலையின் உணர்ச்சியைத் தருகின்றது. ஐம்புல வேடர்களின் கொட்ட மடங்க இன்பபோதத் தண்ணளியிற் சேர்க்கின்றது. இந்த அரிய சொல்லைக் கண்டனர் பண்டைப் பொழுதைய நம் முந்தையோர். இது தொல்காப்பியர் காலத்திற்கும் முந்தியதாய் - மிகத் தொன்மை வாய்ந்தது எனத் தெரி கின்றது, மொழி ஆராய்ச்சி வல்லுனர் கருத்தும் இதுவே. எக்கர்-டார்வின் முதலிய மேலை நாட்டினரும் இது மிகப் பழமை வாய்ந்ததோர் சொல் என்கின்றனர்.

## அருள் பெற்ருர் தம் பெற்றி

எனவே, முழுமுதல் இறைவர்க்கு வேறலாத-அவ ரது ஆடலின் விளைவாய்ப் போந்த மதலைக்குறு நாமங்களாக வரும் சொற்கள் மிகத் தொன்மையாவன வென்பதால், தெய்வ எல்லையின் சீர்த்தியில் நெருக்க மான தொடர்பும் மிகத் தொன்மையாக நம் நாட்டவ ருக்கே இருந்து வந்திருக்கின்றதென்பது இனிதே தெளி வாகின்றது. அவ் வகைத் தொடர்புகளில் வெற்றி பெற்ற நம் முந்தையோர்களான-முருகன் அருள் பெற்ற

பக்தர்களைப்பற்றிச் சிறிது விரித்தல் இங்கு பொருந்தும். அவன் புகழினும் அவன் அருள் பெற்றோர் தம் புகழ்-சீர் மிகவும் இனிக்கும். ஏன்? அவன் அவர்கள் தம் இதயத்து இடங்கொண்டு கொழிக்கும் வளம் எவருடைய உள்ளத்தையும் கொள்ளை கொள்ளும். இவ்விதம் நெஞ்சை அள்ளும் நேரியர் பலர். அவருள் முதல்வன் முழுமுதல் இறையான சிவபெருமா னாகும், முருகன் அருள் பெற்றோர் தம் வரிசையில் முதற்கண் வருவது முழுமுதல் (சிவபெருமான்) என்னில், பக்தர்களின் பெருமை மிகவும் பெரிது பெரிதே. அவர்கள் பல ராயினும் அகத்தியர்-நக்கீரர்-குமரகுருபரர்-அருணகிரி - கச்சியப்ப சிவாசாரியார்-சம்பந்த சரணர் ஆகிய அறுவரையும் பற்றிக் கூறுவோம்.

## அகத்தியர்

இவர் குகன் அருளில் சடாக்கரம் உபதேசிக்கப் பெற்றவர். "தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்" என்று மாபெரும் கவியரசு பாரதி விழைவதே போன்று. தமிழ் அன்னை தன் சீர் பெருக்கியவருள் அகத்தியர் முதல்வர் என்னலாம். அவர் முச்சங்கங்களின் பேராசிரியர்; இயல் இசை நாடகம் எனும் முத்தமிழ் வல்லவர். பொதிகை இவர் தம் உறை விடம். சிவபெருமான் திருமணக் கோலக் காட்சியை இவருக்கு இவருடைய தலத்திலேயே அருளினார் என்னில், இவர் பெருமை மிக உயரியதென்று தெரிகின்றது. இலங்கை அதிபன் இராவணனை இசையில் வென்றவர். முருகன் அருளில் தனக்குக் கிடைத்த வில்லை தன்னை வந்தடைந்த ஸ்ரீராமருக்கு வழங்கி அவர் இலங்கை வேந்தனை வெற்றிகொள ஆசி தந்தருளினார்.

## நக்கீரர்

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவ தெங்கும் காணோம்" என்று கவி பாரதியார் நம்பிடை முழங்கினார். அந்த உண்மைக்குரிய நிலையை அன்று பேணி நின்ற பெருந்தகை இவர். சிவபூசையைச் சிறிதும் வழுவாது செய்து வருபவர். தன் வழிபடு கடவுளரிடம் குற்றங் காணினும் குற்ற மென வெளி யிடுவதிற் கொஞ்சமும் பின் வாங்காதவர். அந்தக் கட வுளரையே "நெற்றிக் கண் கொண்டு நீற்றிடினும் குற் றம் குற்றமே" என்று கூறி நின்ற தீரர். இத்தகைய ஒருவரால் நம் முருகன் சீர் நிலைக்கக் கருதிற்று போலும் ஒரு முதல் ! அதனால், ஒரு நாள் சிவபூசையினின்றும் இவர் சிறிதே வழுவி விட நேர்ந்தது. இவ்விதம் வழு விய ஆயிரவரைச் சேர்த்து ஒரு பொழுதிற் பலி கொள்ள நினைத்த பூதம் ஒன்று இதுவரை தொள்ளாயிரத்து தொண்ணூற்று ஒன்பது பேர்களைச் சிறைப்படுத்தி வைத்திருக்கின்றது. இவருடன் அதன் கருத்து நிறை வேற விருப்பதை நக்கீரர் உணர்ந்தார். அதன் மேல் திருப்பரங் குன்றம் - திருச்சீரலைவாய் - திருவாவினன்குடி - திருவேரகம் - பழமுதிர்ச்சோலை - குன்று தோருடல் முதலிய படை வீடுகள் ஆறினும் உறையும் அவன் பெற்றி விரித்து நிற்க, முருகன் பூதத்தின் கருத்தைச் சிதைத்து சிவபக்தர்களை யெல்லாம் உயிர் கொடு வாழ அருளினார். இவ் வகையில், முருகன் சீர் பரப்பி அருள் பெற்றுருள் நக்கீரரும் ஒருவர். இந்த ஏடுதான் "திரு முருகாற்றுப் படை" என்று வழங்கப் பெற்று வருவது.

## குமர குருபர சுவாமிகள்

சமய முதல்வர் சம்பந்தப் பிள்ளையைப் போல ஓதாதுணர்ந்த பெரியவர் என்பர் இவரை. ஒட்டிய

இளமை ஒரைந்து ஆண்டுகள வரை மௌன (ஊமை) நிலையில் இருந்தவர் இவர். மழலை மாறாத பருவத்து இவரை செந்தில் தலத்து முதல்வனின் பேரருள் ஆட்கொண்டு விடுகின்றது. அதற்கு மேல் நிகழும் அற்புதங்கள் சாமான்யமானதாக இருக்குமா? அன்பர்களே! முருகன் புகழ் மணக்க 'கந்தர் கலிவெண்பா' இவரால் தோன்றுகிறது. தமிழன்றி ஏனைய மொழிகளிலும் வளம் இவருக்குப் பெருகலாயிற்று. காசியின் மன்னன் பெரிதும் இவரைப் போற்றி நிற்கலானான். அங்கு காசி மன்னனுடைய ராஜ்யத்தில் சைவம் ஒளிபெற நிலைக்கும்படி இவர் செய்தார். குமரன் மடம் ஒன்று நிறுவினார். குகன் அருள் வலியில் இவர் ஆற்றிய சைவத் திருப்பணிகள் அனந்தம்.

## அருணகிரி

"ஐம்பெருந்தலங்கள் தம்முள் ஐயமிற் பெரிய செந்தீத்தலம்" என்னும் திருவண்ணாமலை நகர் தோன்றல் இவர். பொருட் பெண்டிர் முயக்குள் பெரிதும் மூழ்கியவர்; அதன் பயனாய் அழியா நோயுள் மிக அழுந்தினார். அது பொழுதும் இவருக்கு பரத்தையர் பற்று குறைந்தபாடில்லை. பொருட் குறைவும்-உடல் நலக் குறைவும் சேர்ந்து இவரை எல்லோரும் வெறுத்து இகழும்படி செய்தது. இந்த நிலையிற் கூட பொது மகளிர் தம் தொடர்பை விட முடியாது தவிக்கின்றார். தவிப்பானேன்? விட முடியாதா? என்ன! உணர்ச்சி பிறக்கவில்லை; அது பிறக்க வேண்டும். தொடர்பின் பூர்ண ஸ்தாயியை எட்டினாலன்றி அது கூடாது. எட்டும் வேளை-முயக்கின் உச்ச ஸ்தாயி-பொறுக்குமா? இவரது உடன் பிறந்த மூதாட்டியால் தெளிவுறுத்தப் பெறுகின்

ருர். அவ்வளவு தான், மின் வேகம் பின்னடைந்து விடும். உணர்ச்சியின் உத்வேகம் பீறிடுகின்றது; வாழ்க்கையில் வெறுப்புத் தட்டுகின்றது அவருக்கு ; இன்பப் பூச்சு-பொய்மை உலகின் தொடர்பை அறுத்துக் கொள்ள விழைகின்ருர். விழைவின் வேகம் வாழ்க்கையின் சகடத்திற்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்து விட முனைகின்றது. முருகனை நினைந்த வண்ணம் கோபுரத்து உச்சிமீதிருந்து விழுகின்ருர். முருகனிலும் முருகனைப் பற்றிய நினைவிற்குப் பெரும் சக்தி உண்டு போலும்! போலும், என்ன! உண்டு என்பதில் குறைவில்லை. முருகனைக் கருதிய அவர்தம் நினைவு அந்த முருகனை ஆண்டு தோன்றச் செய்தது! தோன்றிய வொரு தோற்றம் என்ன வெறுந் தோற்றமா? அல்ல, அருட்பெருங் கருணை வடிவன்ருே! பொல்லாத சேயெனினும் தள்ளி விட முடியாத தாயின் விழைவிலும் பெரிதான விழைவில் விரைந்து இவரை ஆட்கொள்கின்றது. பிறகு ஏது குறை? குறை முழுதும் நைந்து-தேய்ந்து-தேய்ந்தே ஒழிந்தது!

"சும்மா இருக்கச் சொன்னதோர் வார்த்தை அம்மா வதிசயம் ஆருடன் புகல்வேன்" என முருகனது அருள் உபதேச வழி பரம மோனத்து ஆழ்ந்தார். முன்னம் சேக்கிழார்க்குச் சிவபெருமான் "உலகெலாம்" என்று அடி எடுத்துக் கொடுத்தருளியவாறு, இவருக்குச் சின்னுட் பின்னர் முருகன் "முத்தைத் தருபத்தித் திருநகை" என முதலடி எடுத்துக் கொடுக்க, அதனையே ஆரம்பமாகக் கொண்டு முருகன் புகழ் பாடிப் பரவி வந்தார். அந்தப் புகழ்கள் தாம் "திருப்புகழ்" என்னும் ஏடாக இன்று நாம் காணுகின்ருேம். அதில், அவர் தமது அனுபவங்களைப் பெரிதும் கூறியிருக்கிருர். முருகன் தம்மை

ஆண்டருளிய பெற்றியைக் குறிப்பிடாத புகழ் காண்ப தரிது. முருகனுக்கும்-தமக்கும் உள்ள தொடர்புகளின் விசேஷத்தைத் தமது திருப்புகழால் உலகிற்குப் பறை சாற்றுகின்றார், ஏன்? தாம் பெற்ற இன்பம் இந்த வையமும் பெற விழைவது பெரியோர் இயல்பன்றோ! ஆம், இவர் முருகனிடம் மிகுந்த பற்றுக்கோடு கொண்டுள்ளவ ராயினும், சமரச மனப்பான்மை மிகவும் கொண்டவர். தங்கள்-தங்கள் தனிக் கொள்கைகளில்-வழிபாடுகளில் கொண்ட பிடிப்புகளையே யன்றி வேறெதையும் ஏற்கமுடியாத குழுவினரை வாதில் வென்று உண்மைகளை உணர்த்தி, அவர்களை யெல்லாம் சுத்த சமரச நன்னிலைக்கு ஆளாக்கியுள்ளார். இவ்வகையில் இவருக்கு சீடர் பலராயினர்,

இவர் செய்த நூல்களுள் 'கந்தரனுபூதி' மிக முக்கியமான ஒரு ஏடு, கிளி உருப்பெற்று அம்பிகை கரத்தும்-முருகன் கரத்தும் ஒளிரும் சீரியர். இவரது திருப்புகழ் தமிழ் அன்னை தன் சீர்த்திக்கு ஒரு முக்கிய அணியென்ன இன்றும் இலங்கி வருகின்றது. முருகன் புகழ் பாடி முக்தி பெறலாமென்பது அனுபவ சித்தம். இந்தத் திருப்புகழுக்கு மிக முக்கிய ஸ்தானத்தை சமயமும் தங்கள் வழிபாடுகளில் வைத்திருக்கின்றது. தமிழ் வேத மென்னும் தேவார பாராயணம் திருவாசகம்-இசைப்பா-பல்லாண்டு-புராணம் இந்த வரிசைகளோடு மட்டும் முடிவதில்லை; அந்தப் பாராயணம் சரியாக-இனிதே நிறைவேற திருப்புகழ் அதன் இறுதியில் ஒரு பேர் அணியாக இலங்குகின்றது. புகழ் பாடியபின் தான் தேவார பாராயணம் பலனுக் குரியதாக நன்கு நிறைவேறுகின்ற தென்னும் கருத்தில் மிக உன்னதத்தை அதற்குக் கற்பித்து, தக்க இடந் தந்திருக்கின்றனர்.



## கச்சியப்ப சிவாசாரியார்

இவர் குமர கோட்டத்துக் குகன் அருளில் பத்து வயதுகூட நிரம்பப் பெறு முனம் வட-தென் மொழிகள் இரண்டினும் மிக வல்லுநராய்த் தக்க புலமை நலம் வாய்க்கப் பெற்றவர். சங்கர சம்ஹிதையிலுள்ள முருகன் வரலாற்றினைத் தமிழில் 'கந்த புராணம்' என்னும் பெயரில் பன்னீராயிரம் பாக்களில் பொறித்துள்ளார். இதற்கு முருகனே 'திகடச் சக்கரச் செம்முகம் ஐந்துளான்' என அடி எடுத்துக் கொடுத்தருளியதாக அறிகின்றோம். புராணத்தை அரங் கேற்று வைபவத்தின்போது "'திகழ்த சக்கரம் செம்முகம் ஐந்துளான்' எனச் சொற் பிரிக்கக் கண்ட அவையினரிற் சிலர், 'அவ்வாறு பிரித் தற்கு தொல்காப்பியம் முதலிய பெரு நூற்களில் விதி இல்லை' என்று மறுத்தனர். அது சமயம், முருகன் ஆண்டு தோன்றி 'வீர சோழியம்' என்னும் நூலைக் காட்டி, அதில் விதியிருப்பதாகச் சான்று காட்டி யருளி னார். இந்த அதிசயத்தைக் கண்டிருந்த அவையினர் முருகன் அருளை வியந்து பணிந்தனர். பின்னர், நூல் அரங்கேற்று நிகழ்ச்சி இனிதே நிறைவேறிற்று என்று கூறவும் வேண்டுமா! இந் நூல் "நவிற்றொறும் நவிற்றொறும் நாநயம் பயப்பது-பயிற்றொறும் பயிற்றொறும் பரனடிக்கு அன்பு பற்றுவிப்பது" என்று கொண்டாடி னார்களாம்.

## சம்பந்த சரணாலய சுவாமிகள்

இவரும் குகன் அருள் பெற்றருள் மிக உயர்ந்த பெரியார். இவர் முதலில் தருமபுர ஆதீனத்தைச் சார்ந்து-குரு பணிவிடை செய்து வந்தார். குருவின் ஆணை வழி குகதாசரும்-மைசூரின் மன்னருமான கர்த்

தர் என்பவரைக் காணச் சென்றார். அரசரும் இவரை இனிதே வரவேற்று, "இவர் ஒரு அண்டங் காக்கையோ" என்றாராம். அதற்கு இவர் "அஃது யானல்ல" வென்ன லும், மன்னர் முகம் மாறுபடுவதைக் கண்டு "அண்டத் தைக் காவல் செய்யும் சக்தி உமக்கே யன்றி எனக் கேது" என்று பொருள் விரித்தனர். பொருளுணர்ந்த மன்னன் மிகவும் மனமகிழ்ந்து-இவரைப் பெரிதும் உப சரித்து வணங்கி, குகன்பால் கொண்ட அன்பால் "கந்த புராணம் கடல்போல் பரந்து கிடத்தலால், யாவரும் எளிதில் உணரும்வண்ணம் சுருக்கிப் பாடி அருளல் வேண்டும்" என்று கேட்டார். அதற்கிணங்க சுவாமி களும் குகனை நினைந்து அங்கு தங்கி மாதுகரபிக்ஷை பண்ணிக்கொண்டு சொற்சுவை-பொருட்சுவை நிறைய சுமார் ஆயிரத்திற்கு மேலாகவுள்ள திருவிருத்தங்களாக அருளிச் செய்தார். பின்னர், அரசர் முதலிய பலருட னும் திருச்செந்திற் பதி வந்து, அங்கு முருகக் கடவுளர் சந்நிதியில் அரங்கேற்றுவித்தார். அது கண்ட அரசன் சுவாமிகளையும்-கந்த புராண சுருக்க ஏட்டையும் யானை மேல் ஏற்றி-நகர் வலம்செய்து-மூன்று முறை பொன் தட்டில் நவரத்தினங்களைக் கொடுத்தான். சுவாமிகளும் அதனை அவனிடமிருந்து ஏற்று, மாதுகரபிக்ஷை தவிர வேறொன்றும் விரும்பாத நிலையுடையவராதலால், அவ் வரசனைக் கொண்டே குரு-லிங்க-சங்கமங்களுக்கு அவற் றைக் கொடுக்கும்படி செய்தார். அதன்பின், அரச னிடம் விடை பெற்று தருமபுரம் வந்தார். அங்கு குரு மூர்த்தியைத் தரிசித்துக் குகன் திருவடிப் பேற்றினைச் சார்ந்தார். தனக்கென வேண்டாத-பற்றற்ற இவரது நிலையினை உணர்ந்த அரசன் அன்று முதல் தருமபுர ஆதீனத்திற்கு வருடந்தோறும் உயர்தரமான கபிலை

(பசுக்)களை வெகு நாள்வரை அனுப்பி வந்தான் என்று கூறப்படுகிறது.

## புராண சித்திரம்

இவ்விதம் முருகன் அருளில் வந்த பக்தர்களால் அவனது அரிய வரலாற்றுச் சித்திரங்கள் புராண உருவில் கிடைக்கத்தக்கனவாக விருக்கின்றன. அவை தமிழ் இறைவி தன் சிறப்புக்களுக்குப் பெரிதும் உரியனவாய்த் திகழுகின்றன வென்னலாம். அவற்றை ஒவ்வொருவரும் நன்கு படித்து உணரவேண்டுவது முக்கியமான கடமையாகும்; அத்துடன், பரபுண்ணியமுமாகும்.

அன்பர்களே, பொதுவாக புராணங்களில் காணத்தக்க சித்திரங்கள் வெறுங் கற்பனைதான் என்று கூறி விட முடியாது. கைபடச் சுவராய்த் தோன்றும் வெறுஞ் சித்திரங்கள் அல்ல. மற்று, ஆன்ம ஒளி கூட்டும் உயிர் ஓவியங்கள் என்னலாம். அத்துடன் மட்டுமில்லை; இறையருள் விளக்கும் பெரும் பெற்றி வாய்ந்தன. "உலகம் யாவும் ஒரு முதல்வனின் படைப்பு; அந்த ஒரு முதல்வன் கலைஞர்களின் படைப்பு" என்னும் பெரிய உண்மையை நக்கீரர் தமது திருமுருகாற்றுப்படை என்னும் ஏட்டில் பழமுதிர்ச்சோலைத் தலைவனை முன்னிலையாகக் கொண்டு மொழிந்த பாவிற் காணலாம். எனவே, கலைஞர்களின் உயர்வு மிகவும் சீரியது. எல்லோரும் விரும்புகிற முக்திக்கு வழி கலைஞர்களின் சிருஷ்டியாகிய தெய்வத் திருவினை விளக்கும் இத்தகைய புராணங்கள் தாம் என்று கூறலாம். இவற்றுள் கந்த புராணம் மிகவும் உயரியது. அதிற் காணும் வரலாற்றுச் சித்திரங்களை அப்படியே முதலில் கூறி, அதன்பின் அதன் நுண் பொருட்களையும்-குறிக்கோள்களையும் நாம் காணலாம்.

படைப்புக் கடவுளர் என்னும் பிரம்மாவினுல் யாகமொன்று நிகழ்ந்ததில், நந்தியம் பெருமானுல் தேவர்கள் சாபம் பெறுகின்றனர். அதன் பயனுக அவுணர் குழுவினுல் அந்த அமரர்கள் பெரிதும் துன்புறுத்தப் பெறுகின்ருர்கள். இந்த இடுக்கண் களைதற் பொருட்டு சிவனை வேண்டித் தவங் கிடந்தனர். இவர்களுடைய பெருந் தவத்திற்குச் சிவன் இரங்கி, அருள் செய்ய நினைக்கின்ருர். அது கண்ட உமையவளும் அந்த ஐயன் நினைவிற்கு இணங்க, புராண நாயகன் தோற்றம் நிகழுகின்றது.

ஐம்முகம் கொண்ட சிவன் சத்து-அதோமுகத்து உமை சித்து; சத்தும்-சித்தும்கூட ஆனந்தம் ஆறுமுகத்துடன் உதயமாகின்றது.

தோற்ற எல்லையின் தொடக்கத்துத் துலங்கிய சுடர்ப் பொறிகள் ஆறும் தீக் கடவுளர்க்கும் ஆற்ற வொண்ணுததாய் வாயுவைக் கொண்டேகுமாறு ஆகின்றது. அந்த வாயுவும் தன்னுல் ஆற்ற முடியாததாகச் சரவணையிற் சேர்க்க, அங்கு முன்பொரு சாபத்தினுல் மீன் உருவிற் றிகழ்ந்த பராசரரது புத்திரர் அறுவரும் சாப உரு நீங்கப் பெற்று, சுயஉருப் பெறுமாறு அருள் செய்கின்றது. இந்தச் சுடர்கள் பின்பு குழந்தைகள் வடிவில் கார்த்திகைப் பெண்கள் அறுவரின் தவத்திற் கிணங்க அவர்களிடம் தனித் தனியே முலைப்பாலுண்டு அருள்கின்றது. அது பொழுது பார்வதியார் சிவபெருமானுடன் அங்கு வந்து, குழந்தை வடிவுகள் ஆறினையும் ஒன்ருய்ச் சேர்த்து கடாலிங்கனம் செய்ய உடல்கள் ஆறும் ஒன்ருக-இரண்டு கால்-பனிரெண்டு கரங்கள்-ஆறு முகங்களுடன் கூடிய ஒரே திவ்யமங்கள லீலா

மூர்த்தமாகின்றது. சிவனுடனிருக்கும் உமையவள் மடி மீது ஸ்கந்தன் எனப் பெயர் பெறுகின்றது. இப் பெயருடன் கைலை வந்தமர்ந்து குமரக்கடவுளாய் அதி அற்புதமான திருவிளையாடல்களைப் புரிகின்றார் எம் ஐயன். இவர் தோன்றிய சோதிப்பிழம்பின் அருட் பெற்றியில் வந்த வீரவாகு தேவர் முதலிய லக்ஷத்து ஒன்பது வீரர்களும் ஈண்டு போந்து ஐயனைத் தொழுது நிற்கின்றனர். இந்தக் குழுவினை தேவர்கள் தங்கள் அறியாமையாலும்—பயத்தாலும் அவுணர் குழு வென்னவே யெண்ணிப் போர் முழக்க, ஐயன் அவர்கள் அனைவரையும் முதலில் அழித்து விடுகின்றார். அதுகால் **நாரதர்-பிருகஸ்பதி** முதலியவர்களுடைய வேண்டுகோட் கிணங்கி, அவர்களை யெல்லாம் உயிர்ப்பித்து-தமது உண்மை உருக் காட்டி-அவர்களிடம் இருந்த அஞ்ஞான கலையை நீக்கிக் காத்து அருள்கின்றார். பின்னர், நாரதர் செய்த ஒரு வேள்விக்கு இடையூறு செய்த ஆட்டினை அடக்கியருளுகின்றார். படைப்புத் தொழில் முதல்வன் (பிரமன்) பிரணவத்தின் உண்மைப்பொருள் கூறத் தெரியாது திகைக்க, அவர் தலையிற் குட்டிச் சிறையிட்டு விட்டு, தாமே அந்தத் தொழிலை நடத்துவாராயினர். பிரமனுக்குப் பரிந்து வந்த சிவனுக்கு பிரணவப் பொருளை அருளி **சாமிநாதன்** என்னும் நிலைக்கு உயருகின்றார். தமிழ்ப் பெருமுனிவர் அகத்தியனுருக்குத் தமிழ் வேதத்தை யருளினார். அதன் பின்பு, தேவர்களுடைய வேண்டுகோட்காக ஸ்கந்தபுரியை உண்டாக்குகின்றார். தேவர்களுடைய துயர் நீக்குமாறு முனைந்த செயலுக்கு சிவனும்-சக்தியும் உதவிகளைத் தருகின்றனர். அவை தாம் முறையே பதினொரு ருத்திரர்களும் பதினொரு ஆயுதங்களாகத் துணையாயின

தும்-சக்தி தனது அருளில் வேலைக் கையிற் கொடுத்து ஆசி தந்ததும் ஆகும்.

இத் துணை வலுக் கூடியதும், அவுணர்கோனிடம் (சூர பதுமனிடம்) வீரபாகு தேவரைத் தூது செல்லு மாறு அனுப்புகின்றார். அவுணர்களுடைய சிறைக் கோட்டத்து உறையும் இந்திரன் மகனுக்கு கனவு எல்லையில் தோன்றி 'அஞ்சேல்' என அனுக்கிரகிக்கின் றார். அதன்மேல், கிரௌஞ்ச கிரியை வந்தடைந்து தாரகாசுரனை வென்று, திருச்செந்திற்பதியில் கோயில் கொண்டருள்கின்றார். அங்கிருந்தும் சிங்கமுகாசூரன் முதலிய அசுர கணங்களை யெல்லாம் முடித்துக் கடைசி யில் சூரபதுமனையும் வெற்றி கொள்கின்றார். இந்த அவுணர் தலைவன் சாமான்யமானவ னன்று.

"விரிஞ்சன் மால் தேவராலும் விலக்கரும் விறலோனாகிப்
பெருஞ்சுரர்ப் பதமும்வேத வொழுக்கமும் பிறவுமாற்றி
அருஞ்சிறை அவர்க்குச் செய்த அவுணர்கோன்......
........................................"

"மாயையின் வலியோனாகி மால்முதலோரை வென்றே
ஆயிரத்தோ ரெட்டண்டம் அரசுசெய்து யுகநூற்றெட்டு
காயமதழி வின்றாகிக் கடவுளர்க்கு அலக்கண்செய்த
தீயசூர் ................................"

என்றவாறு தன் தவவலிமையின் மிக உயர்ந்தவன் இம்மா சூரன்; மாயை வலி தென்பர், அதனினும் மிக்க வலிமை யுடையவன் அந்த சூரன்மாமதலை யென அறி கின்றோம். அவனது அருந்தவத்துக் கிடைத்த அபூர்வ சக்திகள் தவறான வழிகளில் பயன்படுத்தப் பெறு வதைக்கண்டு இரங்கி, அதனை நேரியதாக்கி அருள் வதே இதன் சுருக்கமான சித்திர மாகும். இவ் வகை

யின் முனைந்த அருள் திருவே யாகிய குமரற்கும் செய் வகை காணுது திகைத்து விடும் அளவில் அந்த அவு ணர் தலைவன் ஆய பல வடிவுகளில் தோன்றி சரி-நிகர்-சமானம்-ஏன்? சற்றுமேல் என்றுங்கூட மதிக்கும்படி அமர் செய்து, கடைசியாய் மாமர உருவில் நிலைபெறு கொள்கின்ருன். இதுகாறும் சலன நிலையில் இருந் தமை தக்க பக்குவமில்லை; சலனமற்ற நிலைதான் உரிய பக்குவம் என்பதை உன்னி, ஞானபண்டிதனுன முருகப் பெருமானும் தான் இது வரை பிரயோகித்த கணை வகைகளை யெல்லாம் விட்டுவிட்டு, பக்குவத்திற்கு உகந்த 'அருள்' என்னும் தெய்வ மோகனக் கணையால் ஆட் கொள்கின்ருன். அந்த அற்புதக்கணை அந்த அவு ணன்பால் பேரதிசயங்களை நிகழ்த்தி விடுகின்றது. மன மோகன எல்லையின் அப்பாலாய் அதனுலும் உணர் வதற்கரிய தெய்வமோகன எல்லையின் அருட் திருக் கணை அதுவாதல், அவுணனின் மாயவடிவினை இரு கூருகச் செய்து விடுகின்றது. அவற்றுள் ஒன்று மயில் உருவில் வாகனமாகவும்-மற்ருென்று சேவல் உருவில் வெற்றிக் கொடியாகவும் ஒளிர முருகன் ஏற்று அருள்கின்ருர். இதன்மேல் தேவர்களுக்கு விடுதலை கிடைக்கின்றது. அதனுல் எய்திய மகிழ்வினுல் அமரர் கள் பதி தந்த தெய்வயானையை முருகன் கடி மணத்துப் பெறுகின்ருர். பின்னர், தெய்வக் காதலிற் களி நிறைந்த ஏற்பின் பெற்றியை யாரும் உணர்ந்து நடக்க வேண்டு மென நினைந்ததே போல-நம் தமிழ் நாட்டின் இயல் மணத்து அதாவது காதல் தொடர்பின் வழி வள்ளியம் மையை மணத்திற் கொள்கின்ருர். இது தான் புராணத் துக் காணத் தக்க சித்திரம்.

# ஆறுபடை வீடு



1. ஸ்வாமி மலை.



2. திருத்தணிகை.



3. பழமுதிர்சோலை.



4. திருப்பரங்குன்றம்.



5. திருச்செந்தூர்.



6. பழனி.

இவ்விதம் ஒரு பெரு முதல்வன் கோவில் தோறும் குமரக் கடவுளாகி-குன்றுகள் தோறும் முருகக் கடவுளாகி-மக்கள் உள்ளந்தோறும் குகக் கடவுளாகி-நாம னைவரும் உய்யும் வண்ணம் கலியுக வரதனேயாக அன்றும்-இன்றும்-ஏன்? என்றென்றும்-எங்கணும் உறைகின்றுன்.

"வேல்வாழி மயில்வாழி சேவல் வாழி
வேறு முளபடைவாழி விளங்கு தண்டைக்
கால்வாழி யருள்பொழியும் விழிகள் வாழி
கவின்குலவு மீராறு கரங்கள் வாழி
மால்வாழி வாழியெனப் பணிந்து வாழ்த்து
மலைமாது தரு முருகன் மகிழ்ந்த வாறு
பால்வாழி யெனையாளுங் கருணை வாழி
பங்கிருந்த மங்கையர்தம் பதங்கள் வாழி."

"துய்யதா மறைக ளாலுந் துதித்திட வரிய தான
செய்யவே ளடிகள் வாழ்க சேவலு மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை வாழ்க வன்னுன்
பொய்யில் சீரடியார் வாழ்க வாழ்க விப்புவன
[மெல்லாம்.'

## தத்துவம்

அன்பர்களே, பெரும்பாலும் புராணச் சித்திரங்கள் எல்லாம் அநேகமாக போர் நிகழ்ச்சிகளையே பெரிதும் விரிப்பன. அதே விதம் சரித்திர வரலாறுகளும் நிலம் புரக்கும் மன்னர்களுள் நிகழும் போர்களும்-அவர்களின் வெற்றி தோல்விகளுமே தான் தாங்கி நிற்பன. ஆனுல் இவை இரண்டிற்கும் அவற்றின் எல்லைகளிலும் குறிக் கோள்களிலும்-முடிவுகளிலும் சற்று வித்தியாசமுண்டு. சரித்திரம் விரிக்கும் போர்கள் பொருள் எல்லையில் நிகழ்ந்தவை; இவற்றின் குறிக்கோளும்-

முடிவுகளும் பொருள் எல்லையிலேயே தான் நின்று விடும். புராணம் விரிக்கும் போர்களோ-பொருள் எல்லையின் நிகழ்ச்சிகளே போல வண்ணந் தீட்டப் பெற்றன வாயினும்-அந்த எல்லையின் அப்பாலாய எல்லைகளையே பெரிதும் குறித்து விரிப்பனவாய்-ஒரு முதற் பொருளின் சம்பந்தத்து மக்கள் உய்யும் நெறி காட்டுவனவாய்த் துலங்கும். அத்துடன், அறிவதற் கரிய பெரிய உண்மைகளைக் கூறுமாறு முயன்ற வேத நுண் பொருள்களை இனிதே விளக்கி வைக்க வென்று எழுந்த திறமை வாய்ந்த உயிர்ச் சித்திரங்கள் என்னலாம்.

இவ்வகையின், விவரிக்கப்பெறும் போர்கள் யாவும் ஒரு சக்தி மற்றொரு சக்தியை அடக்கித் தன் ஆணைவழி வைத்துக் கொள்ளுமாறு செய்யும் முயற்சிகளையே பெரிதும் குறிப்பிடுவன வாகும். இவ்வாறு அடக்கி ஆள முற்படும் ஒரு சக்தி எப்பொழுதும் சாமான்யமானதாக விருக்க முடியாது. அதன் அபூர்வங்கள் யாவும் வெகு பிரயாசையில் தான் ஸித்தித்திருக்கவேண்டுமென்னல் மிகையில்லை. ஆனால், அந்த அபூர்வ சித்திகளைத் தவறான வழியில் பயன்படுத்தப் பெறுகின்ற பொழுது தான் ஸித்திகளின் மூலமான ஒரு தனி என்னும் முதற் பெரும் பொருளின் அருட்செயலுக்கு அவசியம் நேருகின்றது. அந்த ஒரு முதல் தன் அருட் செயலில் ஆட்கொண்டருள, பக்குவத்தை எதிர்பார்த்திருக்கின்றது. "கூர்மை நிறைந்த கோடரிக்கு பச்சை வாழையின் இளந் தண்டினிடம் வேலை யில்லை; மற்று, திரண்டு பெருத்த நெடிய வேல்-பரந்து விசாலித்து வானளாவிய ஆல் முதலிய பிரம்மாண்டமான விருக்ஷங்களிடமே கோடரியின் சிறப்புத் துலங்கும்; அத்துடன், அங்கு தான் அதற்கு வேலையும் அவசியமானதாக நேரும்."

அதுபோல இன்ப-துன்பங்களில் மூழ்கிய நிலைகளிடம் ஒரு முதலின் தோற்றம் பயனற்றது; மற்று, இன்ப-துன்பங்களை ஆளும் பெற்றிக்கு முனையும் ஒன்றினிடம் அதற்கு வேலை இருக்கின்றது. ஆளும் முனைப்பு இன்ப-துன்பங்களை கடந்தது. ஆனால், அதில் 'அகம்' விருத்தி ஒன்று தான் எஞ்சிய நிலையில் விருத்திகளின் ஊற்றுக் கண் அதுவே யாதல், அதனைத் துடைத்து, பேரெல்லை யின் பெரு விகாசத்துச் சேர்த்து அருள்கின்றது-முற் றுள ஒன்று.

இந்நிலையில், ஒரு முதலின் தோற்றத்தின் பொழுது பகவான் கீதையில் அருளியவாறு நிக்ரகமும்-பால னமும் கிரமமாய் நிகழ்ந்து விடுகின்றது. அதன் மூலம் சிருஷ்டி-ஸ்திதி-லயமாதிகளின் சுழற்சி தர்மம் காத்துக் கொள்ளப் பெறுகின்றது. இவ் வகைக்கண் அடக்கப் பெறும் சக்திக்கு விடுதலையும்-ரக்ஷணையும் தான் பலன் கள்; அடக்கி ஆள முனைந்த சக்திக்கு அந்த முனைப் பின் 'அகம்' விருத்தி நீக்கப் பெற்று ஒரு முதற் பொரு ளின் அருள் உணர்வில் தோய வாய்க்கின்றது.

பொதுவில் ஆட்சி விழைவின் முனைப்பு-அந்த முனைப்பினால் பாதிக்கப்பெறும் ஒன்று அந்த பாதையை வெகுவாக உணர்ந்து அதனின்றும் விடுதலை பெற விழைகின்ற விழைவு-வேண்டிய வேண்டியாங்கே ஈந்த ருளும் பெற்றியிற் றிகழும் ஒரு பொதுமையின் தோற் றம்-அந்தத் தோற்றத்தின் அருளில் ஆட்சி முனைப்பு நீக்கப் பெற்றுவிட பொது நிலையின் பெரும் பெற்றியை உணர்த்தி ஆட்கொள்ளும் அருட் செயல்-இதன் மூலம் விடுதலை விழைவும் பூர்த்தியாவது ஆகிய இவ்வளவு தான் புராண சித்திரத்தின் முக்கிய அங்கங்களும்-நிகழ்ச் சிகளுமாம்.

பெருந்தவத்தின் பலனுய் அரிதிற் பெற்ற சக்தி களின் ஆட்சி முனைப்பில் முனைந்தது அசுரர் குழு. இத ஞல் பாதிக்கப் பெறுவதை உணர்ந்து விடுதலை விழை வில் இருப்பது சுரர் குழு. இந்த நிலையில் பொதுமை யின் தோற்றம் முருகன் வடிவில் நிகழ்ந்து, முறையே நிக்ரகமும்-பாலனமும் பலனுக ஏற்படுகின்றன. இவ் விதமான பொதுமைத் தோற்றத்தின் வரலாறும்-அது ஆற்றும் அருட் செயலின் பெரும் பெற்றியும் தான் புராண சித்திரத்தின் ஜீவநாடி யாகின்றது. இதன் மூலம் தெய்வ மணம் விரிக்கப் பெற்று-மக்கள் உய்யு மாறு வழி கோலப் பெறுகின்றது. இவ் வழி தோற்ற எல்லையின் அப்பாலாய-ஆஞல், யாவற்றிற்கும் உள்ளும்-புறமுமாய-யாவற்றின் நிலை பேறுகளுக்கும் ஆதாரமாய்-கருதுவார் தம் கருத்துப்போல தோற்றியருளும் பெற் றித்தாய ஒரு முழுமுதற் பொருளின் நிலை மக்கள் உணர ஏதுவான சித்திரங்கள் எதினும் இந்த உண்மையை இனிதே உணரலாம்.

இதன் நிலை என்றும் புதியது; புதியவற்றின் ஊற்று; நிரந்தரமான யௌவன எழிலிற் றிகழுகின்ற தென்னும் உண்மையை கந்த புராணம் நன்கு விளக்கு கின்றது. பொதுவில், புராண நாயகர்களுக்கு பரத் துவம் கற்பித்துச் சிறப்புத் தருவது வழக்கு. அவ் வகையின் மட்டுமின்றி பொது-சிறப்பு-தனி என்ற எந்த முறைகளினும் கவனிக்கையில் முழுமுதல்-முருகன் நிலைக்குப் பரத்துவம் மிகப் பொருத்தமாகும்; உண்மை யும்கூட, புனைந்துரை யன்று; புராண நாயகனுன முருக னது நிலை என்றும் பேரிளமைத் திறம் நிறைந்ததாக நன்கு வண்ணம் தீட்டப் பெற்றிருக்கின்றது. தெய்வ எல்லையின் அதிதீக்ஷண்யம் விஞ்ஞான அறிவு எல்லை

யிலும் உணரும்படி அல்லது அத்தகைய ஆற்றலை உண்டுபண்ணத் தக்க அளவில் புராணத்தின் சித்திரங்களைத் தீட்டிய ஆசிரியர்கள் பெரிதும் முயன்றிருக்கின்றனர்.

"ஆக்கி அளித்துத் துடைக்கும் தொழில் அத்தனையும் வைத்திருந்தும் எள்ளத்தனையேனும் தாக்கற நிற்கும் சமர்த்து" உடையது ஒரு முதற் பொருள். "அகிலாண்ட கோடி அத்தனையும் ஈன்ற அன்னையே யாயிடினும் பின்னையும் கன்னியென மறைபேசும் ஆனந்த ரூப மயில்" என்றெல்லாம் முதற் பெரும் பொருளைப் பற்றிக் கூறியிருக்கின்றனர். "......உலகுயிரெலா மீன்றும் பரன் பிரமசாரி யாகும், பான்மொழி கன்னியாகும்" என்று அருணந்தி சிவாசாரியார் அருளியவாறு ஈசனது லீலைகள் அறுபான் நான்கினும் ஈற்றிலுள்ள பெரும் லீலையின் நிலையாதல், முருகனுக்கு குன்ருத இளமை நலம் ஏற்புடைத்தே. அத்துடன், அது ஒரு பூரண நிலையென்பதைக் குறிக்கும் வாயிலான், சிவனது ஐம்முகமும்-சக்தியின் அதோமுகம் ஒன்றும் கூடியதாய் ஆறுமுக வடிவில் முருகனது தோற்றம் நேருகின்றது. வள்ளி-தெய்வயானை-வேல் இவை மூன்றும் முறையே இச்சா-கிரியா-ஞான சக்திகளாகும். சிவன்-சக்தி இரண்டும் ஒன்ருகிய சுத்தப் பிரம நிலையேதான் சாக்ஷாத் சுப்ரமன்யம்.

## விஸ்வரூபம்

"ஒன்று நீயல்லை யன்றி ஒன்றில்லை யாருன்னை யறியகிற்பாரே" என்ருர் மணிவாசகப் பெருந்தகை. அது போல ஈசனது நிலை இவ்வண்ணத்தன்-இம் மேனியன்-இந் நிறத்தன் என்று எழுதிக் காட்ட வொண்ணுத

தன்ஞே! ஆம், இத்தகைத்தான-அளப்பரிய ஒரு பெரு நிலையினை உணராதவர் அவுணரே அன்றி அமரரும் கூட வென்று தெரிகின்றது. ஏன், ஒரு சமயம் அமரருக்கும் மற்றொரு பொழுது அவுணர் தலைவனுக்கும் குமரக் கடவுளர் தமது விஸ்வரூபத்தை உணர்த்தி யருளுகின்ருர். முன்னதிற்குக் கைலையும்-பின்னதற்குப் போர் அரங்கும் இடமாகின்றன.

அவுணர் குழுவினல் அமரர் படும் இடுக்கண் களை தற்கென்றே வீரபாகு தேவர் முதலிய லட்சத்து ஒன்பது வீரர்களும் வந்து தொழ கைலைப்பதியில் குமரக் கடவுள் அருட் காட்சி தருகின்ருர். அது கால் அமரர்கள் தங்கள் அறியாமையால் அந்தக் காட்சியை அவுணர் குழுவின் மாயக் கோலமென்ன எண்ணி அமுர் முழக்கினர். எனினும், ஐயன்-அருள் வடிவன்ருே! அறியாமையின் முனைந்த அவர்கள்பால் இரங்கித் தமது உண்மை உருவைக் காட்டி யருளி, "சகல அண்ட-பிண்ட சரா-சரங்களும் தனது உருவே யல்லால் வேறில்லை; யாவும் தம்முள்ளே தோற்றி-தம்முள்ளே ஒடுங்கும்" என்னும் இரகசியத்தை உணர்த்திய நிலையை,

"சேயென முன்பெமைக் கருதி செருப்புரிந்தி
　　ரினி யெமது
தூயவிறற் காணு மெனத் தொல்லுலக
　　மண்ட முயி
ராய வெலாந் தனதுருவே யல்லால்
　　வேறில்லை யென
நேய வொரு வடிவு கொடு நின்ரு
　　னெம் பெருமானே"

என்று புராண ஆசிரியர் பொறிக்கின்ருர்.

போர் அரங்கம்-அங்கு முதன் முதலாக அவுணர் கோன் குழந்தை வடிவில் போர்க்கோலம் தாங்கி ஆண்டு தோன்றிய முருகனைக் காணுகின்றான். கண்டதும் எப்படி இருக்கும்? கொஞ்சம் அவனுடைய நிலைக்கு வந்து பாருங்கள். உங்கள் உள்ளத்தின் உணர்ச்சி அலைகள் மிக அலக்ஷியமான சிரிப்பலைகளைச் சிதறிவிடு மல்லவா! ஆம், அத்துடன், அவுணர் தலைவன்-அந்தச் சூரன் மாமதலை நின்றுவிடவில்லை. ஒரு படி மேலே போய் விடுகின்றான். என்ன, முருகனது பாலப் பருவத்தை உன்னி மிகவும் கழிவிரக்கங் கொள்கின்றான். தனது வலிமை மிக்க பலத்தின் தவறான உணர்வில் ஒரு அசட்டு நகை முழக்கம் பொங்கிஎழ முருகனை விழித்து "பால, நான் உன் தாயால் வரம் பெற்றவன் ; அவளிடம் பால் அருந்திய நினது கொடுவாய் துடைக்கும் ஆற்றல் கூட வில்லாத பச்சிளங் குழந்தை நீ ; போருக்கு முனைந்த உன்னைக் கண்டு மிகவும் இரங்குகின்றேன். ஏன்? நின் வதை ! ஆ ! பார்வதி அம்மைக்கு மனம் மிக நோகும் ! ஆதலின், ஓடி விடு." எனக் கூறி நிற்கின்றான். குழந்தை-முருகேசன் அது பொழுது அந்த அவுணர் கோனிடம் எந் நிலை கண்டோ-ஏது பரிவு கொண்டோ உண்மை உருக்காட்டி, தெய்வ எல்லையின் எழிற் பெற்றியை உணர்த்துகின்றான். அந்த அவுணர் தலைவன் அரசு புரிகின்ற அண்டங்களை ஒத்த பல கோடி அண்டங்கள் தம்முளே அவன் காண தோன்றச் செய்கின்றார். தம்மையன்றி வேறொன்றும் எங்கும் இல்லை யென உணர்த்துகின்றார். இவ்விதம் உணர்த்த உணர்ந்த சூரன்மாமதலை தன் உணர்ச்சியை, "மயில் மீது குலவிய குமரன்றன்னைப் பாலன் என்றிருந்தேன்-அந்த நாள் ; அவன் பரிசு இதுவென அறிதிலேன். மால்-அயன்-ஏனை

வானவர்க்கும் யார்க்கும் மூலகாரணமாய் நின்ற மூர்த்தி யாம் மூர்த்தியன்றோ" என்று வெளியிடுகின்றான்.

மேலும் "பல்காற் பார்க்கினும் தெவிட்டிற்றில்லை யின்னு மென் பார்வை தானும்" "தொல்லோன் மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்" என் றெல்லாம் வியந்து நிற்கின்றான். அத்துடன் மட்டு மில்லை; முருகன் தான் வழிபடும் பரமசிவமே என்றும் உணர்கின்றான்.

இவ் வழி முருகன், அபேதமான பேருண்மையை பக்தருக்கும்-பகைவருக்கும் ஒருங்கே உணர்த்தியருளு வது கவனிக்கத் தக்கது.

## சோமாஸ்கந்த மூர்த்தம்

இம் மூர்த்தமே கந்தர் சஷ்டி விரதத்திற்குரிய திவ்ய மங்கள லீலா விக்ரகமாகும். அன்பர்களே, இது எல்லாக் கோயில்களிலும் இருக்கும். அதைக் கவனித் துப் பாருங்கள். பெரிய உண்மையைக் கொண்டுள்ள இந்த அரிய மூர்த்தம் சிவனும்-முருகனும் ஒன்றே என் னும் அபேத நிலையை உணர்த்தும் நெறியின் இனிதே அமைந்திருக்கின்றது.

சத்-சித்-ஆனந்த வடிவு குகன்; எல்லோருடைய இருதய கமலங்களிலும் இடங் கொண்டிருக்கின்றது. 'ஓம்' என்னும் குடிலையே முருகனது மாமுகங்கள் ஆறி னுள் ஒன்று என சம்பவ காண்டம் நன்கு அறிவுறுத்து கின்றது. ஆதலால், குமரனைப் பிரித்துப் பேசுதல் சிவா பராதமாகும். இந்தப் பெரிய உண்மையை சக்திக்கு விளக்கும் வாயிலான் அமைந்த ஒன்றே சோமாஸ்கந்த மூர்த்தமாகும்.

'சதா சிவ ஓம்' என முழங்கிய சாமவேதம் 'சுப்பிர மணிய ஓம்' என மும்முறை கூறிற்று. முன்னது சிவ பெருமானையும்-பின்னது சிவ குமாரனையும் குறிக்கும். சிவ பெருமானும்-சிவகுமாரனும் இரண்டிலாத அபேத எல்லையின் அதி தீக்ஷண்யமான பிரணவப் பொருளாக உள்ளவர்கள். இவ்விதம் பரமசிவன் கூறியதாகக் கந்த புராணத்தே காணப் பெறுகின்றது. இந்த உண்மை யையே காஞ்சிப் புராணமும்,

"எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும்
பிரமனுக்கும் ஈச னென்னத்
தக்கமுதல் பரப்பிரம சதாசிவனேமென
வேதஞ் சாற்று மல்லான்
முக்கனல் சூழ் வேள்வியிற் சுப்பிரமணிய
னேமெனவு முக்காற் கூறும்
.........................................
..............................."

எனக் குறிப்பிடுவது காண்க.

## காப்பது விரதம்

"காப்பது விரதம்" என்றார் நமது ஔவை மூதாட் டியார். ஆம், காப்பது என்றால் எதைக் காப்பது? ஈது அறிதல் முதற்கண் ணுள்ளது. பொறிவழி செல்லும் மனத்தைத் தடுத்து ஒரு முதற் கடவுள் மாட்டு அன்பு வழி நிறுத்திக் காத்தலே எனக் கொள்ளல் மதி யுடைத்து; உண்மையு மாகும். இவ்வாறாகிய விரதம் இனிதே நிறைவேறற்கு மக்கள் அனுஷ்டிக்கத்தக்க சாத னங்கள் பல உள்ளன. பலவாய அவை யனைத்தும் ஒரே லட்சியத்தின் சித்தியைக் கோரிச் செல்லும் மக் களின் ஒரோர் பக்குவங்கட்கு ஏற்றனவாக மிளிருவன வென்னலாம்.

அவ் வகையின், உண்ணும் உணவின் வகைகளை மாற்றுவர் சிலர்; வேறு சிலர் உணவின் அளவைச் சுருக்குவர்; சிலர் தடவையைக் குறைப்பர்; சிலர் உணவை விடுத்து கனி-காய்-இலை-சருகாதி கந்தமூலங்களை உண்டு கிடப்பர்; சிலர் ஜலத்தைப் பருகி யிருப்பர்; சிலர் காற்றைப் புசித்திருப்பர்; சிலர் காற்றின் கண்ணுள்ள மிக நுணுகிய பிராணவாயுவின் தாரணையால் மதி அமுதம் உண்டு இருப்பர். இவை யெல்லாம் சாதாரண எல்லையில் உடல் நலம்-உரம்-வனப்பு-நீணாள் தரைவாழ்வு என்னும் ஆயுர்-ஆரோக்கிய-நித்ய யௌவனங்களை ஒருவர் பெறுவதற்கு உதவுவனவே. ஆனால், தெய்வ எல்லையின் பெரு நினைவுத் தொடர்பில் அவை ஒருவர் கோரும்-இம்மை-மறுமை நலன்களையும், நித்ய கைவல்யப் பேற்றையும் பெற ஏதுக்களாக மிளிரும் என்பது ஆன்ற அறிவுடையார் பலரும் ஒப்ப முடிந்த ஒரு பேருண்மை யாகும். இவ்வழி, பண்டிதரோடு பாமரரும்-எவ்வகைப் படிகளில் உள்ளவரும் எளிதில் அனுஷ்டித்து வரத்தக்க முறைகளை நமது முருகனது அரிய சமயம் வகுக்காமல் வகுத்திருக்கின்றது.

உடல்-மனது-புத்தி இவற்றின் மலினங்கள்-மந்தம்-ஆயஸம் முதலியன நீங்கிப் புத்துயிர் பெறுவதற்கு நித்தம் நீராடல் முதற்கண் வரும். பொதுவாக, நீராடல் தங்கள் நித்திய வேலைகளில் ஒன்றாகப் போய்விட்ட நம்மவருக்கு அதைப்பற்றி நினைவு, புதிதாய் ஊட்ட வேண்டுவதில்லை. ஆனால், அது-அந்தச் செயல் ஈசன் நினைவில் தெய்வ எழிலைப் பெருக்குகின்றது என்று குறிப்பிடுதல் மிகவும் முக்கிய மாகும். சைவசமய முதல்வருள் மிகப் பெரியவரான அப்பர் சுவாமிகள் அதிகாலையில் நீராடலைக் குறிப்பிடுவதோடு மிக எளிய-

ஆனால், உயரிய பலனுக்குரிய ஒரு அர்ப்பண பூசையை யும் தன் அனுபவத்துள்ளதை வெளி யிடுகின்றார். "மணம் மிக்க மலர்களால் இறைவன் கழல்களை நித்தம் ஏத்திய பெற்றியின் யாரும் துறத்தற்கரிய துன்பத் தைத் துறந்து விடும் மிக மேலாம் நிலை ஒன்றை யடைந் தேன்" என வெற்றி முரசம் முழங்குகின்றார்,

பொருள் எல்லையின் (Material Plane) உணர்வில் மணம் மிக்க மலர் ஒன்றை ஒருவர் காணின், அதனைத் தனக்கு ஒரு இன்பம் நல்கும் (போகப்) பொருளாகவே மதித்து, அதன் நுகர்ச்சி விழைவில் அதற்குரிய கருவியி னிடம் அர்ப்பணஞ் செய்வர்; ஆனால், தெய்வ எல்லை யின் பெருநினைவில் எல்லாம் வல்ல ஏகநாயகனுக்கே தான் அர்ப்பணஞ் செய்ய வரும். இதில் ஆச்சரிய மொன்றுமில்லை. இவை இரண்டில் முன்னது மாமாயை என்னும் சிறைத் துன்பத்திற்கும்-பின்னது விடுதலை இன்பத்திற்கும் அடிகோலி நிற்கும். இந்தப் பேருண் மையை உணர்ந்து-நடந்த வதனால் உயர்ந்த அப் பெரிய வர் "நறுமாமலர் கொய்து நீரின் மூழ்கி நாடோறு நின் கழலே யேத்தி வாழ்த்தித் துறவாத துன்பம் துறந் தேன்" என்று கூறுவது உங்களுடைய அரிய கவனத் திற்கு வந்திருக்கும்.

### சின்னங்கள்

இனி, சின்னங்களைப்பற்றிச் சில சொல்லுதல் அவ சிய மாகும். சின்னங்கள் என்பன ஆன்ம ஒளி கூட்டும் நெறிக்கு உகந்தன என்பதுடன், சாதாரணமாக உடல் நலத்திற்கும் உரியன என்று இன்றைய ஆராய்ச்சிக் காரர்களும் ஒப்புகின்றனர்.

"புழுகுசெஞ் சாந்திவை புனைந்து புன்மல
மொழுகு மொன்பான் றுளையுடம்பை யென்றுநீ,
யழகு செய்திடில் மலமகளுமோ பரன்
முழுகு வெண்ணீறிடின் முற்று மாயுமே"

என தூய வெண்ணீற்றின் சிறப்புக்களைக் கூறுவர். உடல் நலத்திற்கு விபூதி யணிதல் மிகவும் ஏற்றதென்று இன்றைய அறிவு உலகும் ஒப்ப முடிந்த தாகும். விபூதி என்னும் 'பஸ்ம' நிலையில்தான் கல்ப ஔஷதங்கள் உள்ளன. சித்தர்கள் எதனையும் இந்த நிலைக்குக் கொணர்ந்து பயன் படுத்துவார்கள். இதன் உயரிய தன்மையை உன்னி பஸ்ம நிலையின் தீக்ஷண்யத்தை 'வேதாந்த விபூதி' என்பர். அதனினும் மேலாய-யார்க்கும் எளிய விபூதியை நமது சமயம் கண்டிருக்கின்றது. கோமயம் (பசுவின் சாணம்) பஸ்ம நிலைக்குக் கொணரப்பெற்று மக்கள் உடம்பை உள்ளும்-புறமும் தூய்மைப் படுத்துவதற்குப் பயன்படுத்திக்கொள்ள நம் முந்தையோர் வகுத்தனர். மக்கள் உடற்கு வேண்டிய போதுமான பிராண வாயுவின் சேர்க்கை பஸ்மநிலையில் மிக நுண்ணியதாய் உத்தூளன மாத்திரையிலேயே (வெளியே பூச்சு ஒன்றினாலேயே) உடலெங்கும் உள்ளும்-புறமும் பரவிக் கலந்து கொண்டுவிடத் தக்கவிதம் நிறைந்திருக்கின்றது எனக் கண்டிருக்கின்றனர். எனவே, உடல் நலத்திற்காயினும் சரி-ஆன்ம சுத்திக்காயினும் சரியே; விபூதி உடலிற கொள்வது முக்கியமென்று தெரிகின்றது.

பாண்டியன் வெப்பு நோயான் மிக வருந்துகின்ருன். மந்திர-தந்திர சிகித்சைகளில் தேர்ந்த சமண சமயத்து நிபுணர்கள் தங்களாலானவைகளை யெல்லாம் மிக உணர்ச்சியோடு செய்து பாடுபடுகின்றனர். ஆயினும், பலன் விபரீதத்திற்கே அதி உச்ச ஸ்தாயியிற் சென்று

கொண்டிருக்கலாயிற்று. இதுவேளே நமது கந்தன்-சுப் பிரமணியத்தின் திரு அவதார மென்றே கருதும் ஞான சம்பந்தப் பிள்ளேயின் உதவிக்கு அந்தப் பாண்டியனும்-அவனுடைய நிபுணர்களும் சரணுகதி விருத்தியில் விழைகின்றனர். அதன்மேல் சம்பந்தப் பிள்ளே திரு வருளே முன்னிட்டு, பாண்டியனது சுரநோய் நீக்கினு ரென்பது வரலாற்றிற் காணும் சித்திரம். இதில், சம் பந்தப் பிள்ளே திருவருளே முன்னிட்டு சுரநோய் நீக்கி ஞரே அதற்கு வேறு ஏதும் கல்பங்கள்-ஔஷதங்கள் இல்லேயா என நீங்கள் கேட்கலாம். கல்பங்களினும்-ஔஷதங்களினும் மிக மேலான ஒன்று அவருடைய பிரயோகத்திற்கு உதவியா யிருந்தது; அது என்ன, அதுதான் பரன்முழுகு வெண்ணீறு! மந்திரம்-தந்திரம்-யாவும் அதுவே என்று சொல்லிக்கொண்டே விபூதி யைப் பாண்டியனது உடலெங்கும் உத்தூளனஞ் செய் தார். அவ்வளவுதான்! பாண்டியன் வெப்புநோய் திர்ந்தனன். பார்த்தீர்களா! அன்பர்களே! விபூதியின் மகிமையை! இந்த சித்திரம் வெறும் கற்பனேயல்ல; கற் பனே யென்று கருதுவார்க்கும் உண்மையை உணர்த் தும் உயரிய சித்திரம் என்பதை உங்கள் உள்ளத்தே நன்கு பதித்து, அனுபவத்தே சற்று பார்த்தால் தெரி யும். இது அன்று நடந்த கற்பனேயாக விருக்கட்டும். நேயர்களே, இன்றும் நடந்து வருகின்ற-பண்டிதரோடு பாமரர்கள்வரை எல்லோருடைய அனுபவத்தும் உள்ள மெய்ச்சான்று இங்கு தக்க எடுத்துக் காட்டாக விருக் கும். செந்திற்பதி-என் தலேவன் திருக்கோயிலின் திவ்ய பிரசாதமாக யாவருக்கும் வழங்கப் பெறுகின்ற இலே **விபூதியின்** அற்புதம்! நீங்கள் தெரிந்திருக்கிறீர்கள். தீராத நோய்கள்-தாபங்கள் தீர்க்கப் பெறுகின்றன

அந்த இலை விபூதியால்! அன்று சம்பந்தனாய்த் தோன்றி வெண்ணீற்றின் மகிமையை நிலைநிறுத்திய அண்ணலே: இன்று செந்திலில் கோயில் கொண்டு மக்கள் இன்னல் தீர்த்து அருளுவதன் மூலம் திருநீறு-அதன் பெருமையை உணர்த்தி வருகின்றான். இது உங்கள் நினைவில் இருக்கட்டும்.

இதன்மேல் சின்னங்களில் அடுத்துள்ள ஒன்று உருத்திராக்கம். இதன் சிரிய தன்மை ஒருவருக்கு அவருடைய எல்லைகள் (Planes) யாவினும் தருகின்ற பெருநலன்களைக் கண்டு அதனை நலன் தரும் கண் (உருத்திர-அக்கம்) என்றனர். உடல் நலத்திற்கு இதனை மிக உயரிய பொருளாக வைத்திய நிபுணர்கள் கருதுகின்றனர். இதன்கண் தங்கஉரம்-அதாவது உலோக நுண் சத்து மிகுந்திருப்பதாக பொருள் ஆராய்ச்சி வல்லுநர் கண்டிருக்கின்றனர். இவ் வகையின், இதனை இயற்கையின் ஒரு அரிய வரப்ரஸாதமாகவே கூறவேண்டும். இயற்கையின் விளைவாக அவை ஒன்றும்-அதற்கு மேற்பட்ட பல முகங்களை (Faces) உடையன. அத்தகைத்தான ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகை விசேஷங்களுக் குரியனவாதல், அவை யாவும் மக்களால் பயன்படுத்தத் தக்கவைகளே, தெய்வ சம்பந்தத்து அதன் உபயோகத்தை நம் முந்தையோர் பெரிதும் வற்புறுத்தி யிருக்கின்றனர். பொதுவில், அது ஸ்பர்ஸ மாத்திரத்திலேயே அதனிடம் உள்ள சத்து உரம் ஸ்பர்ஸப் பொருளுள் சென்று அதன் நலத்திற்குரிய விதம் பரவிக் கலந்துகொள்ளும் தன்மையை யுடையது. அதனால் அதனை உடலெங்கும் அணிந்து கொள்வர் ஆன்றோர். சைவ சமயம் தனது முக்கிய சின்னமாக விதித்துக் கழுத்தில் ஒற்றையாகவும்-பலவாகவும் மக்

கள் அணிந்துகொள்ளுமாறு செய்தது. இவ்விதம் அது செய்ததில் உடல் நலங் கருதிய விதிகளிலும் அதற்கு தக்க நிபுணத்துவம் இருக்கின்றதென நிரூபணஞ் செய் திருக்கிறது. மக்கள் உடல் நலங்-குன்றாத யௌவ னத்தின் திடம் வாய்ந்த உரம் இவற்றிற்கு இளமையின் இரகசிய கோளம் என்று சொல்லப்பட்டு வருகிறதே, அந்த 'தைராய்ட்' என்னும் அதிசய கோளத்தையும் அதன் ரஸ தாதுவையும் புதிப்பித்துவிட நிபுணர்கள் சின்னாள் முன் கண்டனர். இந்த அதிசய கோளத் தின் அபூர்வத்தன்மை தன்னிடம் வரும் எத்தகைய விஷங்களையும் ஏற்று அமிருதமாக ஆக்கிவிடும் பெற்றி யுடைத்து. இதையே புராணச் சித்திரம் தெய்வ எல்லை யின் வண்ணமாகத் தீட்டி 'திருநீல கண்டம்' என்றது. இந்த கோளம் புத்துயிருடன் இருக்கும் வரை உடற்கு அழிவில்லை-வலுவுங்கூட. இதன் நேர்மைக்கும் புத்துயி ருக்கும் குரங்கினிடமுள்ள தசைக்கோளப் பகுதியை மனிதர்களுக்குச் சத்திர சிகித்சை மூலம் பதித்துப் பார்த்தனர் இன்றைய நிபுணர்கள். இவ்வாருகிய விப ரீதங்களுக் கெல்லாம் இடம் நேராமல், உடல் நலத்திற் குரிய முக்கிய கோளத்திற்கு தக்க உரத்தை ஜீவ ஊற் றுப்போல தந்துகொண்டே யிருக்கத்தக்க விதம் நம் முன்னோர்களான மேதைகள் அதற்குரிய சத்துநிறைந்த-ஸ்பர்ஸ மாத்திரையின் நம்முள் பரவிக் கலந்துகொள் ளத்தக்க இயற்கையையுடைய உருத்திராக்கங்களைக் கண் டத்தே அணிந்து வருமாறு செய்தனர். அன்பர்களே, உருத்திராக்கங்களின் பெருமையை விரித்தல் சாத்திய மான தொன்றன்று. அத்தகைய இயற்கையின் பிரசாத மாக விருக்கும் அந்த ருத்திராக்க மணியை உடல் நலங் கருதியேனும் ஒவ்வொருவரும் அணிந்து வரலாம்.

தெய்வ நினைவில் எல்லையற்ற அற்புதங்களை நிகழ்த்த வல்லது.

உருத்திராக்கங்களில் சிறிய காத்திரமுடையன ஜெபத்திற்குரிய மாலையாக அணிந்து கொள்வதால் உடம்பினும்-ஜெபஞ் செய்கையில் கைவிரல் நுனிகளி லும் சம்பந்தம் இருந்து வரும்படி செய்தனர். அவ் விதம் செய்ததில் பெரிய இரகசிய மொன்றுளது. கைவிரல்களின் நுனிகள் மிக அற்புதமான உள் அமைப் புக் கொண்டன. அந்த அபூர்வ அமைப்பின் உத்தேசம் நமது உடலுக்கு வேண்டிய ஜீவசக்திகளைப் போதிய வாறு நம்மைச் சுற்றிய வெளியிலிருந்து இயற்கை தர வைத்திருப்பதை நேரே சரியாய்ப் பெறுவதற்காகும். அதற்குத் தக்கவிதம் அமைக்கப்பெற்ற அவை புதுமை யுடன் விளங்க அக்கமாலை பேருதவியா யிருக்கிறது. அக்கமணிகளோ ஜீவசக்தி நிறைந்த நுண்சத்து நிலையம் (Power House). அத்தகைய மணிகளை விரல் நுனிகளி னால் உருட்ட-உருட்ட நம்முள் ஏராளமான ஜீவ சக்தி கள் வந்து சேரத் தக்கதாக விருக்கும். அதிலும் தெய்வ நினைவில் அவை திரு நிறைந்தனவாக-சொல்லரிய அதி சயங்களுக் குரியனவாக நம்முள்ளே வந்து நிறைகின் றன. இதனால்தான் ஜெபங்களுக்கு எண்ணிக்கை கணக்கிட இம் மணிகளாலாய மாலையை வைத்தனர்.

எனவே, எவ்வகையினும் உருத்திராக்கத்தின் உப யோகம் மக்களுக்கு அதிலும் சைவராயினர்க்கு மிகவும் முக்கியமானதாகும்.

## உபவாசம்

தெய்வ நினைவில் மக்கள் கொள்ளத்தக்க விரத சாதனங்கள் யாவினும் தலையாயது உபவாசம்-அதாவது

உணவின்றி யிருத்தல் ஆகும். சாதாரணமாக "லங்கனம் பரம ஔஷதம்" என்ற பழமொழிப்படி பட்டினி யிருத்தல் நோய் நீக்கம்-உடல் ஆக்கம் இவற்றிற்குத் தக்க ஒரு சிகித்சையாகும். இந்த சிகித்சைகளில் நோய்க்கேற்ற முறைகள் அனுஷ்டித்துக் கொள்வதற்கு விதிக்கப் பெற்றுள்ளன. அதே விதம் தெய்வ சம்பந்தத்து உண்டியின்றி யிருத்தல் என்னும் உபவாசத்திற்கும் சில விதி முறைகள் உண்டு. அவ்வழி கந்தனைக் குறித்து உபவாச மிருப்பதற்குரிய தினங்களைப் பின்னர் காண லாம். இப்பொழுது உபவாசமிருக்கும் முறையை முதற் கண் அறிவோம்.

உபவாச தினத்தின் முன்நாள் நித்திய கருமம் யாவும் கிரமமாய் இயற்றி, பகலவன் (சூரியன்) வானத்து உச்சியை நண்ணு முன்னம்-அதாவது நண் பகல் மணி பனிரெண்டிற்கு முன்னரேயே ஒருபொழுது உணவருந்துதலோடு உபவாசம் ஆரம்பிக்கப் பெறல் வேண்டும். உபவாச தினத்தன்று இரண்டு வேளை கூடு மானால் மூன்றுவேளையும் நீராடி, ஆசமனீய அளவு-அதா வது உள்ளங்கைக் குழிவின் அளவு மூன்று முதல் ஆறு தடவைகள் சுத்தோதகம் (சுத்த ஜலம்) உட்கொள்ள லோடு இருத்தல் வேண்டும். உபவாசத்தின் அடுத்த தினம் கிழக்கு அடிவானில் (Horizen East) ஸ்வர்ண மயமான கிரணங்களை வீசி எழுந்துவரும் பகலின் தலை வனை அந்தப் பொழுதிலேயே கண்டு, பின்பு உபவா சத்தை முடித்து பாரணை செய்யலாம். (உண்ணலாம்)

இதுகால், அதாவது இந்த உபவாசப் பொழுது முழுவதும் கந்தனை நினைந்து, அன்னான் புகழ் பாடி-சீர் விரித்து வருவதிலேயே மன-மொழி-மெய்களை ஈடு படுத்தி யிருக்கவேண்டும். இவ்விதம் ஒருமை மனத்தி

ளோடு நோற்று வருவார்க்கு அவன் அருள் இம்மை-மறு மைப் பதங்கட்கும், அவை கடந்த நித்திய கைவல்யப் பேற்றிற்கும் முன்னிற்கும் என்பது மிக உண்மை யாகும். "நோற்றிடு மளவில் ஐயன் உறுதியுடைச் செவ் வேல் வந்து..." ஆட்கொள்ளும் எனக் காண்கின்றோம்.

## கந்தனுக்கு உகந்த விரத தினங்கள்

இவ்வகை நோற்றிடும் தினங்களை உடல் நலங் கரு தியவர்கள் மாதத்தில் ஒரு நாள்-வாரத்தில் ஒரு கிழமை-பக்க மிரண்டினும் நாள் இரண்டு (அதாவது நிறைமதி நாள்-முழுமதி நாள்)-வருடத்தில் சின்னாள் என்றெல் லாம் வகுத்துக் கொள்வார்கள்; வேறு-வேறாகத் தோன் றும் பல சமயத்தவரும் தங்கள்-தங்கள் கொள்கைகளில் வரும் தினங்களையும்-சித்தி யடைந்தார் நாட்களையும்-குரு பிதுரர் கைவல்யப் பொழுதுகளையும் நோற்றிடற்கு விதித்துக் கொள்வர். இவை யாவற்றையும்விட முக்கி யம் வாய்ந்தன கலியுக வரதனான கந்தனுக்குகந்த விரத தினங்கள் ஆகும். அவற்றின் விவரம் ஈண்டு காணு தல் அவசியம்.

வாரங்கள் ஏழினும் வெள்ளி-வான்மீனம் (உடுக் கள்) இருபான் ஏழினும் கார்த்திகை நாள்-துலா ராசி யில் மதி வளரத் தொடங்கிய திதி தொட்டு தினம் ஆறு இவை மூன்றும் மிக முக்கியமானவை.

**வெள்ளிக்கிழமை :—**

"நயமுடைய இந்திரனை நாயகத் திட்டாய்
வயமிக்க அசுரரின் மாயையைச் சுட்டாய்
வியனுலகி லானந்த விண்ணிலவு பெய்தாய்
துயர்நீங்கி யென்னுளம் சுடர்கொளச் செய்தாய்"

என்றார் மகாகவி பாரதியார். அதுபோல பொன்னுல கின் சீர்த்தி நிலைநிறுத்தி, இந்திரனை நாயகத்திட்டது-

அசுரரின் மாயையைச் சுட்டது-மண்ணுலகில் ஆனந்த விண்ணிலவு பெய்தது - மக்கள் உளம் தெய்வச் சுடர் கொள அருளியது ஆய இத்தனையும் நம் கந்தவேள் முடித்தது இந்த வெள்ளிக்கிழமையில்தான். எனவே, இந்நாள் நோற்பவர் அமரப் பேற்றை - அமலவாழ்வை - அருட்தேசு நிலையைப் பெறுவர்; ஆதலால், **ஸ்ரீ பால சுப்ரமனிய மூர்த்தியை** நினைவிருத்தி வியாழனில் ஒரு பொழுதுண்டு-வெள்ளியில் உபவாசமிருந்து-சனி உதயத்து பாரணை செய்துவரல் வேண்டும். பகிரதன் வனத்திலே இருந்து இந்த வெள்ளி விரதத்தை மூன்று ஆண்டுகள் முறையொடு ஆற்றிவந்ததன் பயனாக, முன்னம் தன் பகையினத்தால் இழந்துபோன அரச பதவியைத் திரும்பவும் பெற்றான் என்று அறிகின்றோம்.

**கார்த்திகை நாள்;**—கார்த்திகைப் பெண்கள் அறுவர் நம் கந்தனுக்குச் சரவணையில் முலைப்பா லூட்டி வளர்த்தார்க ளல்லவா! அதன் பயனாக, நம் கந்தன் அவர்களுடைய மைந்தன் என வழங்கிவர சிவபெருமான் அனுக்கிரகித்துவிட்டார். பணிக்குப் பரிசு தரவேண்டாமா! என்ன! ஆம். அதனால்தான் **'கார்த்திகேயன்,'** எனக் கந்தனுக்கு ஒரு பெயர் வழங்கி வருகின்றது. அத்துடன், சிவபெருமான் விட்டுவிடவில்லை; கார்த்திகேயனை அந்தக் கார்த்திகை நாளில் வழிபடுவோர் குறை தீர்த்து-அவர்களுக்குத் தம் பரநிலையையும் தருவதாக அருளுகின்றார். இவ்விதம் சிவகுமாரனைக் குறித்துக் கார்த்திகை நாளில் நோற்றிடுவார்க்குத் தரும் பலனைப் பற்றிய சிவபெருமான் மொழியை,

"கந்தன்றனை நீர் போற்றிய கடனா
லிவ னுங்கண்
மைந்த னெனும் பெயராகுக
மகிழ்வா லெவனே

நுந்தம் பகலிலிடை யின்னவ
னேன்றன் வழிபடுவோர்
தந்தங் குறைமுடித்தே பரந்தனை
நல்வே மென்ருன்."

என்று கந்த புராணம் பதிவு செய்திருக்கிறது.

கார்த்திகையின் முன்னுள் பரணியிலே ஒருபொழுதுண்டு-கார்த்திகையில் உபவாச மிருந்து-உரோகணியன்று வைகலில் பாரணை செய்தல் முறையாகும். இந்த நாள் நோன்பிருந்து பலன் பெற்ருர்-எண்ணிலாதவர். நாரத பிரம்மம் ஒருபொழுது நம் நிலவுலகு நண்ணி, ஈண்டு இந்நாள் விரதத்தை பன்னிரெண்டு ஆண்டுகள் இடைவிடாது முறையொடு ஆற்றிவந்தார். அதன் பயனுக கதிர்வேற் பெருமான் இன்னருள் பெற்றியால் முனிவர் எழுவருக்கும் மேலாகிய நிலைக்கு உயர்ந்தார்.

சஷ்டி விரதம்:—

இதுவே கந்தனைக் குறித்த விரதங்களில் அதி முக்கியமானது. பன்னிரு திங்களிலும் (மாதங்களிலும்) வளர்மதி சஷ்டியில் நோற்பாரும் உளர். இதனுல் கருதிய பயன் பெறலாம். முக்கியமாக, ஐப்பிசித் திங்களில் பிறை வளரத் தொடங்கும் பொழுதிருந்து (அதாவது பூர்வபக்கப் பிரதமை தொட்டு) சஷ்டி வரையும் தினங்கள் ஆறும் நோற்பது மிகவும் விசேஷங் கொண்டதாகும். இந்தப் பொழுதுதான் அவுணர் குழுவின் மாயையைத் துடைத்தது; அக் குழுவின் தலைவன் வரம்பிலா அருள் பெற்று உய்ந்த-தூய்மை நிறைந்த பொழுது. எனவே, இந்தப் பொழுது நோற்றிடுவார் அடைவதற்கரிய பேறுகளைப் பெறுவர் என்பது திண்ணம். இந்த நாள் ஆறினும் கந்தன் அருளிய லீலைகளை

யும்-அதன் உண்மைகளேயும் உணர்ந்து-அன்னுன் சீர் விரித்து-புகழ் பாடி-ஒருமை உணர்வுடன் அவன் கழற்கு அன்பு வைத்துப் பரவியிருந்து, ஏழாம் நாள் உதயத்தே முருகனேயும்-அவன் பழய அடியார்களேயும் முறை யொடு பூசனே இயற்றி-வந்தித்து-அந்த அடியார் குழா முடன் பாரணே செய்தல்வேண்டும். இவ்வாறு உப வசிக்கும் முறையை பாக்களில் விரிக்கப் பெற்றுள்ளன. அதில் அமரரும்-முனிவரும்-மற்றுள யாரும் இந்த விர தத்திஞல், அவுணர் குழு அதன் முனம் பறித்துக் கொண்ட தங்கள் பதத்தை மீண்டும் பெற்றுய்ந்தனர் என்று கூறியிருக்கின்றது. எனவே, பகை வெல்லல்-பழய ஆக்கம் கூடல்-புதிய மலர்ச்சி ஆகிய ஸித்திகள் இந்த விரதத்தின் பயஞகக் கைகூடுமெனத் தெரிகிறது. பாக்கள் வருமாறு:—

"வெற்பொடு மவுணன் றன்னே வீட்டிய தனிவேற் செங்கை
யற்புதன் றன்னேப்போற்றி யமரரு முனிவர் யாருஞ்
சொற்படு துலேயின் றிங்கட் சுக்கிலபக்கந் தன்னின்
முற்பக லாதியாக மூவிரு வைக ஞேற்ருர்."

"முந்திய வைக லாதி மூவிரு நாளுங் காலே
யந்தமில் புன லின்மூழ்கி யாடையோ ரிண்டு தாங்கிச்
சந்தியிற் கடன்கள் செய்து தம்ப விம்பங் கும்பத்திற்
கந்தனே முறையே பூசை புரிந்தனர் கங்குற்போதில்"

"நிறை தருகட்டி கூட்டி நெய்யிஞற் சமைக்கப்பட்ட
குறை தவிர் மோதகத்தைக் குமர நாயகற் கருத்திப்
பிறவுள விதியுஞ் செய்து பிரான் றிருப்புகழ் விஞவி
யுறுபுனல் சிறிது மாந்தி யுபவசித் திருந்தார் மாதோ."

"ஆரண முனிவர் வானே ரங்கதன் மற்றை வைகல்
சீரணி முருகவேட்குச் சிறப்பொடு பூசையாற்றிப்
பாரணம் விதியிற் செய்தார் பயிற்றுமிவ் விரதந்தன்னுற்
ருரணி யவுணர் கொண்ட தம்பதத் தலேமை பெற்ருர்."

இந்த விரத நோற்று பலன்களில் உயர்ந்தவர் எண்ணில் கோடி-கோடி என்னலாம். இவர்களில் முதல்வன் முசுகுந்த சக்கரவர்த்தியாகும். இவனது ஆணையால் தன் மக்கள் அனைவரையும் இந்தவிரதத்தை அனுஷ்டித்து வரும்படி செய்தான்.

இந்த விரதத்திற்குரிய அருள் மூர்த்தம் சத்-சித்-ஆனந்த ரூபமாக இலங்கும் சோமாஸ்கந்த மூர்த்தமே யாகும். இது இந் நிலவுலகிற்கு முசுகுந்த சக்கரவர்த்தி யால் விண்ணவர் கோனிட மிருந்து கொண்டுவரப் பெற்றது. அந்த வரலாற்றுச் சித்திரம் மிகவும் ருசிகர மானது. ஆகலின், அதனைக் காணுவோம்.

வலாசுரன் என்னும் ஒரு அவுணனால் இந்திரனு டைய பதவி பறிமுதல் செய்யப்பட்டு விடுகிறது. கந்தர் சஷ்டி விரத மிருந்து முருகன் அருள் பெற்றார் தான் இவனை வெல்லுதல் சாலும் என அறிந்து, அவ் வகை யின் அருள் பெற்ற நிலவுலகின் மன்னன் முசுகுந்தன் உதவியினால் அந்த அவுணனை வென்று திரும்பவும் தன் பதவியை இந்திரன் அடைகின்றான். அதனாலாகிய மகிழ்ச்சியில் முசுகுந்தனை அமரர்பதி தன் பூசைஅறைக்கு அழைத்துச் சென்று, அங்கு தான் பூசித்து வரும் சோமாஸ்கந்த மூர்த்தியை தரிசிக்கச் செய்கின்றான். அம்மை-அப்பர்-குமரர் இம் மூவரும் ஒரு புடை மேவிக் கயிலையின் அமர்ந்த காட்சியைக், கண்டு முசுகுந்தன் தன்போத மிழந்தவனாய் பரவசனாய் விடுகின்றான். இது வேளை சிவபெருமான், "புவிதனிற் கொடுபோய் நம் மைப் பூசனை புரிதி" யென முசுகுந்த சக்கரவர்த்திக்கு அவன் உள்ளத்தே உணர்த்த, அவன் தன் சுபாவ எல் லைக்கு வந்ததும்-உள்ளத்தே ஒரு பெருமான் உணர்த்தி

யதே போல, இந்திரனை நோக்கி, அவன் பூசித்துவரும் அந்த ஸோமாஸ்கந்த மூர்த்தத்தை நிலவுலகினுக்கு எடுத்துச் சென்று அங்கு தான் பூசித்துவரத் தன்னிடம் தருமாறு கேட்கலாயினன். அமரர் கோவுக்கு மனம் வருமா? அது ஒரே யடியாய் இசையேன் என்கின்றது. என்ன செய்வான், பாவம்! மறுத்து விடவும் கூடவில்லை. அதன்மேல் ஒரு யுக்தி தோன்றுகிறது. உடனே தேவ சிற்பியை வரவழைத்தான். தான் பூசித்துவரும் மூர்த்தம் போன்று சமைக்கச் செய்து முசுகுந்தனிடம் தருகின்றான். முசுகுந்தனா ஏமாறுகின்றவன்? இந்திரன் பூசித்து வரும் மூர்த்தமல்ல அது என்று சொல்லி விடுகிறான். அவ்விதம் ஆறு முறை இந்திரன் முயற்சித்தும் முசுகுந்தனைத் திருப்தி செய்ய முடியவில்லை. தான் கண்ட மூர்த்தத்தையே கருதி விழைவுட னிருக்கின்றான் முசுகுந்த சக்கரவர்த்தி. இந்திரன் இதுவும் இறைவன் திருவருள் என நினைந்து, 'மார்ப மெனும் பொன்னூச லாட்டுகந்து மங்கை யொடுங்கும் அரனோடு மகிழ்ச்சியொடும் வீற்றிருந்த....................' சோமாஸ்கந்த மூர்த்தியைத் தந்து விடுகின்றான். இந்த அரிய மூர்த்தம் திருவாரூரிலும்-இதுபோல் சமைக்கச் செய்த ஆறும் நாகை-திருநள்ளாறு-திருக்காறாயல்-திருக்கோளரியூர்-திருவான்மியூர்-திருமறைக்காடு ஆகிய தலங்களிலும் விதி முறையால் முசுகுந்தனால் ஸ்தாபிக்கப் பெற்று, அவற்றிற்குக் கிரமமான பூசைகளும்-கந்தர் சஷ்டி விழாவும் அவன் நடத்திவந்து, ஐயன் அருளில் தோய்ந்தான்.

## அனுபவம்

கண்ணன் மருகோனாகிய கந்தன் எல்லோருடைய இருதய கமலங்களிலும் யாண்டுமுளன். அவனுக்குரிய

விரதங்களை இயற்றி பூசித்துவரின், அவனை ஆண்டு கண்டு மகிழலாம்.

''அமரர்தூதன் சமரநாதன் ஆர்த்தெழுந்தானே
—இந்நேரம்
குமரிமைந்தன் எமதுவாழ்வில் கோயில்கொண்
டானே—இந்நேரம்''

என்று பாரதியார் தமது அனுபவத்தை உலகிற்குப் பறை சாற்றுகின்றார். அதுபோன்று எளியேன் அனுபவத்தும் ஆடிப் பாடிப் பரவிக் கண்ட இன்பம் விரிக்கும் தரமன்று. திங்கள் தோறும் சஷ்டியிலும்-ஐப்பிசித் திங்களில் சஷ்டி நாள் ஆறிலும் உபவாசமிருந்து-அது கால், சஷ்டி கவச பாராயணஞ் செய்து வந்துள்ளேன்.

'தூயபெருங் கனலைச் சுப்பிரமணியனை-நேயத்துடன்
பணிந்தால் கிளியே-நெருங்கித் துயர் வருமோ'

என்று பாரதியார் முழங்கிய தொப்ப, துயர் துடைக்கும் தூய ஒளியின் தேசு என் அமைதிக்கு எட்டும்படியிருக்கின்றது.

கவசம் என்பது போர் வீரர்கட்குரியதே போன்று தோன்றுகின்றதல்லவா ? ஆம். நாம் ஒவ்வொருவரும் போர்வீரர்கள்தாம்; மாமாயையின் சித்திரங்களே நம் மாற்றலர்கள்; தூயபெரு வெளியே போர் அரங்கு; இதில் நமக்குத் துணையென்ன அரண் செயத் தகுவது சஷ்டி கவசமாகும். இதனை அணிதல் எவ்வாறு ! உரு வேறத் திருவேறும் என்பர் ; அதுபோல, மனன பூர்வம் பயன்படுத்துதல் தகுதியுடைத்தாம். தேவராயன் இந்தக் கவசத்தைப் பகர்ந்தனன்.

''..........................................
காலையின் மாலையில் கருத்துடனுளும்—

ஆசாரத்துடன் அங்கம் துலக்கி—
நேசமுடனுளும் ஒருநினை வதுவாகி...........

...........................................
சிந்தை கலங்காது தியானிப்பவர்கள்—
ஒருநாள் முப்பத்தாறுருக் கொண்டு—
ஓதியே ஜெபித்துகந்து நீரணிய........"

சித்திகள் யாவும் ஒருவருக்கு உண்டு என்று அவர் உறுதி தருகின்ருர். ஆதலின், அதனை யாவரும் பக்தி-சிரத்தைகளுடன் தியானித்துப் பயன் அடைவார்களாக !

## முடிவுரை

"படை மலிந்த மழுவாளும் மானுந் தோன்றும், பன்னிரெண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்..." என்ருர் நாவுக்கரசர். அவ்வாறே பேதமற்ற நிலையில் ஒன்றே முழுமுதற் கடவுள் என உங்கள் உள்ளத்தே நன்கு இசைத்துக்கொண்டு, மனமுருகித் தியானித்து,

"ஆதிநடு அந்தங் கடந்த நித்தியானந்த போத மாய்ப் பந்தந் தணந்த பரஞ்சுடராய்-எவ்வுயிருக்கும் தஞ்சமென நிற்கும்" தனிப்பெரும் பொருள்—அருட்பெருஞ் சோதியாம் சிவகுமாரனைப் போற்றுமின் ! அருள் வடிவினனுகிய சிவகுமாரனின் சுடர் ஒளியை நெஞ்சில் நினைமின் ! பிறவிப் பயன் நீங்க அவன் இன்னருளிற் கூடுமின் !

"வாழ்க வேதியர் வையத் தரசனும்
வாழ்க வானவர் மாரியு மோங்குக
சூழ்க சைவத் துறையினி லுள்ளவர்
ஆழ்க குகன் மலரணைவர்க ணெஞ்சுமே."

---

# கந்தர் சஷ்டி கவசம்.

---

## காப்பு—நேரிசை வெண்பா.

துதிப்போர்க்கு வல்வினைபோந் துன்பம்போம் நெஞ்சிற்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்து—கதித்தோங்கும்
நிஷ்டையுங் கைகூடும் நிமல ரருள்கந்தர்
சஷ்டி கவசந் தனை.

## குறள் வெண்பா.

அமரரிடர் தீர அமரம் புரிந்த
குமரனடி நெஞ்சே குறி.

1. சஷ்டியை நோக்கச்
சரவண பவனார்
சிஷ்டருக் குதவுஞ்
செங்கதிர் வேலோன்

2. பாத மிரண்டில்
பன்மணிச் சதங்கை
கீதம் பாடக்
கிண்கிணி யாட

3. மையன் நடஞ்செயும்
மயில் வாகனனார்
கையில் வேலாலெனைக்
காக்கவென்று வந்து

4. வரவர வேலா
யுதனார் வருக
வருக வருக
மயிலோன் வருக

5. இந்திரன் முதலா
வெண்டிசை போற்ற
மந்திர வடிவேல்
வருக வருக

6. வாசவன் மருகா
வருக வருக
நேசக் குறமகள்
நினைவோன் வருக

7. ஆறுமுகம் படைத்த
ஐயா வருக
நீறிடும் வேலவன்
நித்தம் வருக

8. சிரகிரி வேலவன்
சீக்கிரம் வருக
சரஹண பவனார்
சடுதியில் வருக

9. ரஹண பவச
ரரரர ரரர
ரிஹண பவச
ரிரிரிரி ரிரிரி

10. விணபவ சரஹ
வீரா நமோநமோ
நிபவ சரஹண
நிறநிற நிறென

11. வசாஹனப
வருக வருக
அசுரர் குடிகெடுத்த
ஐயா வருக

12. என்னை யாளு
மிளையோன் கையில்
பன்னிரண் டாயுதம்
பாசாங் குசமும்

13. பரந்த விழிகள்
பன்னிரண் டிலங்க
விரைந்தெனைக் காக்க
வேலோன் வருக

14. ஐயுங் கிலியும்
அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும்
உயிரையுங் கிலியும்

15. கிலியுஞ் சௌவும்
கிளரொளி யையும்
நிலைபெற் றென்முன்
நித்தமு மொளிரும்

16. சண்முகன் றீயும்
தனியொளி யொவ்வும்
குண்டலி யாஞ்சிவ
குகன்றினம் வருக

17. ஆறுமுகமும்
அணிமுடி யாறும்
நீறிடு நெற்றியும்
நீண்ட புருவமும்

18. பன்னிரு கண்ணும்
பவளச் செவ்வாயும்
நன்னெறி நெற்றியில்
நவமணிச் சுட்டியும்

19. ஈராறு செவியில்
இலங்கு குண்டலமும்
ஆறிரு திண்புயத்
தழகிய மார்பில்

20. பல் பூஷணமும்
பதக்கமும் தரித்து
நன்மணி பூண்ட
நவரத்ன மாலையும்

21. முப்புரி நூலும்
முத்தணி மார்பும்
செப்பழ குடைய
திருவ யிறுந்தியும்

22. துவண்டமருங்கில்
சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த
நற்சீ ராவும்

23. இருதொடை யழகும்
இணைமுழந் தாளும்
திருவடியதனில்
சிலம்பொலி முழங்க

24. செககண செககண
செககண செககண
மொகமொக மொக
[மொக
மொக மொக மொக
[மொக

25. நகநக நகநக
நகநக நகென
டிகுகுண டிகுடிகு
டிகு குண டிகுண

26. ரரரர ரரரர
ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி
ரிரிரிரி ரிரிரி

27. டுடுடு டுடுடு
டுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு
டங்கு டிங்குகு

28. விந்து விந்து
மயிலோன் விந்து
முந்து முந்து
முருகவேள் முந்து

29. என்றனை யாளும்
ஏரகச் செல்வ
மைந்தன் வேண்டும்
வரமகிழ்ந் துதவும்

30. லாலா லாலா
லாலா வேசமும்
லீலா லீலா
லீலா விநோதனென்

31. றுன்றிரு வடியை
உறுதியென் றெண்
[ணும்
என்றலை வைத்துன்
இணையடி காக்க

32. என்னுயிர்க்குயிராம்
இறையவன் காக்க
பன்னிரு விழியால்
பாலனைக் காக்க

33. அடியேன் வதனம்
அழகுவேல் காக்க
பொடிபுனை நெற்றியைப்
புனிதவேல் காக்க

34. கதிர்வே லிரண்டு
கண்ணினைக் காக்க
விதிசெவி யிரண்டும்
வேலவர் காக்க

35. நாசிக ளிரண்டும்
நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப்
பெருவேல் காக்க

36. முப்பத் திருபல்
முனைவேல் காக்க
செப்பிய நாவைச்
செவ்வேல் காக்க

37. கன்ன மிரண்டும்
கதிர்வேல் காக்க
என்னிளங்கழுத்தை
இனியவேல் காக்க

38. மார்பை யிரத்ந
வடிவேல் காக்க
சேரிள முலைமார்
திருவேல் காக்க

39. வடிவே லிருதோள்
வளம்பெறக் காக்க
பிடரிக ளிரண்டும்
பெருவேல் காக்க

40. அழகுடன் முதுகை
அருள்வேல் காக்க
பழுபதி னாறும்
பருவேல் காக்க

41. வெற்றிவேல் வயிற்றை
விளங்கவே காக்க
சிற்றிடை யழகுறச்
செவ்வேல் காக்க

42. நாணாங் கயிற்றை
நல்வேல் காக்க
ஆண்குறி யிரண்டும்
அயில்வேல் காக்க

43. பிட்ட மிரண்டும்
பெருவேல் காக்க
வட்டக் குதத்தை
வல்வேல் காக்க

44. பணைத்தொடை யிரண்
[டும்
பருவேல் காக்க
கணைக்கால் முழந்தாள்
கதிர்வேல் காக்க

45. ஐவிர லடியிணை
அருள்வேல் காக்க
கைக ளிரண்டும்
கருணைவேல் காக்க

46. முன்கை யிரண்டும்
முரண்வேல் காக்க
பின்கை யிரண்டும்
பின்னவ ளிருக்க

47. நாவிற் சரஸ்வதி
நற் றுணை யாக
நாபிக் கமலம்
நல்வேல் காக்க

48. முப்பா லடியை
முனைவேல் காக்க
எப்பொழுது மெனை
எதிர்வேல் காக்க

49. அடியேன் வசனம்
அசைவுள நேரம்
கடுகவே வந்து
கனகவேல் காக்க

50. வரும்பக றன்னில்
வச்சிரவேல் காக்க
அரையிரு டன்னில்
அனையவேல் காக்க

51. ஏமத்திற் சாமத்தில்
எதிர்வேல் காக்க
தாமத நீக்கிச்
சதுர்வேல் காக்க

52. காக்க காக்க
கனகவேல் காக்க
நோக்க நோக்க
நொடியி னோக்க

53, தாக்க தாக்க
தடையறத் தாக்க
பார்க்க பார்க்க
பாவம் பொடிபட

54. பில்லி சூனியம்
பெரும்பகை யகல
வல்ல பூதம்
வலாஷ்டிகப்பேய்கள்

55. அல்லற் படுத்தும்
அடங்கா முனியும்
பிள்ளைக டின்னும்
புழைக்கடைமுனியும்

56. கொள்ளிவாய்ப் பேய்க
[ளும்
குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும்
பிரம ராக்ஷதரும்

57. அடியனைக் கண்டால்
அலறிக் கலங்கிட
இரிசி காட்டேரி
இத்துன்ப சேனையும்

58. எல்லினு மிருட்டிலும்
எதிர்படு மன்னரும்
கனகபூசை கொள்ளும்
காளியோ டனைவரும்

59. விட்டாங் காரரும்
மிகுபலபேய்களும்
தண்டியக் காரரும்
சண்டாளங்களும்

60. என் பெயர் சொலவும்
இடிவிழுந் தோடிட
ஆனை யடியினில்
அரும் பாவைகளும்

61. பூனை மயிரும்
பிள்ளைக ளென்பு
நகமு மயிரும்
நீண்முடி மண்டையும்

62. பாவைக ளுடனே
பலகலசத்துடன்
மனையிற் புதைத்த
வஞ்சனை தனையும்

63. ஒட்டியச் செருக்கும்
ஒட்டியப் பாவையும்
காசும் பணமும்
காவுடன் சோறும்

64. ஓது மஞ்சனமும்
ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால்
அலைந்து குலைந்திட

65. மாற்ருன் வஞ்சகர்
வந்து வணங்கிட
காலதூதா ளெனைக்
கண்டாற் கலங்கிட

66. அஞ்சி நடுங்கிட
அரண்டு புரண்டிட
வாய்விட் டலறி
மதி கெட்டோட

67. படியினின் முட்டப்
பாசக் கயிற்ருல்
கட்டுட னங்கம்
கதறிடக் கட்டு

68. கட்டி யுருட்டு
கால்கை முறிய
கட்டு கட்டு
கதறிடக் கட்டு

69. முட்டு முட்டு
முழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு
செதிற் செதிலாக

70. சொக்கு சொக்கு
சூர்ப்பகைச் சொக்கு
குத்து குத்து
கூர்வடி வேலால்

71. பற்று பற்று
பகலவன் றணலெரி
தணலெரி தணலெரி
தணலது வாக

72. விடுவிடு வேலை
வெருண்டது வோட
புலியும் நரியும்
புன்னரி நாயும்

73. எலியுங் கரடியும்
இனித்தொடர்ந்தோடத்
தேளும் பாம்பும்
செய்யான் பூரான்

74. கடிவிட விஷங்கள்
கடித்துயரங்கம்
ஏறிய விஷங்கள்
[எளிதுட னிறங்க

75. ஒளிப்புஞ் சுளுக்கும்
ஒருதலை நோயும்
வாதஞ் சயித்தியம்
வலிப்பும் பித்தம்

76. சூலைசயங் குன்மம்
சொக்குசிரங்கு
குடைச்சல் சிலந்தி
குடல்விப் பிரிதி

77. பக்கப் பிளவை
படர்தொடை வாழை
கடுவன் படுவன்
கைத்தாள் சிலந்தி

78. பற்குத் தரணை
பருவரை யாப்பும்
எல்லாப் பிணியும்
என்றனைக் கண்டால்

79. நில்லா தோட
நீஎனக் கருள்வாய்
ஈரே ழுலகமும்
எனக் குறவாக

80. ஆணும் பெண்ணும்
அனைவரு மெனக்கா
மண்ணா ளரசரும்
மகிழ்ந் துறவாகவும்

81. உன்னைத் துதிக்க
உன்றிரு நாமம்
சரஹண பவனே
சைலொளிபவனே

82. திரிபுர பவனே
திகழொளி பவனே
பரிபுர பவனே
பவமொளி பவனே

83. அரிதிரு மருகா
அமரா பதியைக்
காத்துத் தேவர்கள்
கடுஞ்சிறை விடுத்தாய்

84. கந்தா குகனே
கதிர் வேலவனே
கார்த்திகை மைந்தா
கடம்பா கடம்பனை

85. இடும்பனை யழித்த
இனியவேள் முருகா
தணிகா சலனே
சங்கரன் புதல்வா

86. கதிர்காமத் துறை
கதிர்வேல் முருகா
பழனிப் பதிவாழ்
பால குமாரா

87. ஆவினன் குடிவாழ்
அழகிய வேலா
செந்தின்மா மலையுறும்
செங்கல்வ ராயா

88. சமராபுரி வாழ்
சண்முகத் தரசே
காரார் குழலாள்
கலைமக ணன்றாய்

89. என்னா விருக்க
யானுனைப் பாட
எனைத்தொடர்ந் திருக்கும்
எந்தை முருகனைப்

90. பாடினே னாடினேன்
பரவசமாக
ஆடினே னாடினேன்
ஆவினன் பூதியை

91. நேசமுடன் யான்
நெற்றியி லணிய
பாச வினைகள்
பற்றது நீங்கி

92. உன்பதம் பெறவே
உன்னரு ளாக
அன்புடன் ரக்ஷி [மும்
அன்னமும் சொன்ன

93. மெத்த மெத்தாக
வேலா யுதனார்
சித்திபெற் றடியேன்
சிறப்புடன் வாழ்க

94. வாழ்க வாழ்க
மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க
வடிவேல் வாழ்க

95. வாழ்க வாழ்க
மலைக்குரு வாழ்க
வாழ்க வாழ்க
மலைக்குற மகளுடன்

96. வாழ்க வாழ்க
வாரணத் துவசம்
வாழ்க வாழ்கவென்
வறுமைக ணீங்க

97. எத்தனை குறைகள்
எத்தனை பிழைகள்
எத்தனை யடியேன்
எத்தனை செய்யினும்

98. பெற்றவ னீகுரு
பொறுப்ப துன்கடன்
பெற்றவள் குறமகள்
பெற்றவ ளாமே

99. பிள்ளையென் றன்பாய்ப்
பிரிய மளித்து
மைந்தனென் மீதுன்
மனமகிழ்ந் தருளித்

100. தஞ்சமென் றடியார்
தழைத்திட வருள்செய்
கந்த சஷ்டி
கவசம் விரும்பிய

101. பாலன் தேவ
ராயன் பகர்ந்ததைக்
காலையின் மாலையில்
கருத்துட னாளும்

102. ஆசாரத் துடன்
அங்கந் துலக்கி
நேசமுட னொரு
நினைவது வாகிக்

103. கந்தர் சஷ்டி
கவசமிதனைச்
சிந்தை கலங்காது
தியானிப் பவர்கள்

104. ஒருநாள் முப்பத்
தாறுருக் கொண்டு
ஓதியே செபித்து
உகந்து நீறணிய

105. அஷ்டதிக் குள்ளோர்
அடங்கலும் வசமாய்த்
திசைமன்ன ரெண்மர்
செயல தருளுவர்

106. மாற்றல ரெல்லாம்
வந்து வணங்குவர்
நவகோள் மகிழ்ந்து
நன்மை யளித்திடும்

107. நவமத னெனவும்
நல்லெழில் பெறுவர்
எந்தநாளு மீ
ரெட்டா வாழ்வர்

108. கந்தர்கை வேலாங்
கவசத்தடியை
வழியாய்க் காண
மெய்யாய் விளங்கும்

109. விழியாற் காண
வெருண்டிடும்பேய்கள்
பொல்லா தவரைப்
பொடிபொடியாக்கும்

110. நல்லோர் நினைவில்
நடனம் புரியும்
சர்வ சத்துரு
சங்கா ரத்தடி

111. அறிந்தென துள்ளம்
அஷ்ட லட்சுமிகளில்
வீரலட்சுமிக்கு
விருந்துணவாகச்

112. சூரபத்மாவைத்
துணித்தகை யதனால்
இருபத் தேழ்வர்க்
குவந்தமு தளித்த

113. குருபரன் பழநிக்
குன்றினி லிருக்கும்
சின்னக் குழந்தை
சேவடி போற்ற

114. எனைத் தடுத்தாட்கொள
என்றன துள்ளம்
மேவிய வடிவுறும்
மேலவ போற்றி

115. தேவர்கள் சேனா
பதியே போற்றி
குறமகள் மனமகிழ்
கோவே போற்றி

116. திறமிகு திவ்ய
தேகா போற்றி
இடும்பா யுதனே
இடும்பா போற்றி

117. கடம்பா போற்றி
கந்தா போற்றி
வெட்சி புனையும்
வேளே போற்றி

118. உயர்கிரி கனக
சபைக் கோரரசே
மயினட மிடுவோய்
மலரடி சரணம்

119. சரணஞ் சரணம்
சரஹண பவஓம்
சரணஞ் சரணஞ்
சண்முகா சரணம்,



வள்ளியம்மை தெய்வயானை சமேதராய் விளங்கும்
ஆறுமுக நயினார்.



"ஆறுசுடர் முகங்கண்டு விழிக்கின்ப மாகுதே
கையில் அஞ்சலெனுங் குறிகண்டு மகிழ்ச்சி-உண்டாகுதே.
நீறுபடக் கொடும்பாவம் பிணிபசி யாவையும்—இங்கு
நீக்கி யடியவரை நித்தமுங் காத்திடும் வேலவா
கூறுபடப் பல்கோடி யவுணரின் கூட்டத்தைக்—கண்டு
கொக்கரித் தண்டங் குலுங்கச் சிரித்திடுங் கோழியாய்
மாறுபடப் பல்வேறு வடிவொடு தோன்றுவான்—எங்கள்
வைரவி பெற்ற பெருங்கனலே வடிவேல்வா"

—பாரதியார்.

# முருகன் தோத்திரம்.

## திருப்புகழ்.

கைத்தல நிறைகனி யப்பமோ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணி
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமி முடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடி செய்த அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடு
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

---

சரண கமலாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறை தியானம் வைக்க அறியாத
சடகசட மூடமட்டி பவவினையிலே சனித்த
தமியன் மிடியால் மயக்க முறுவேனோ
கருணைபுரியாதிருப்ப தெனகுறையி வேளைசெப்பு
கயிலைமலை நாதர்பெற்ற குமரோனே
கடகபுய மீதிரத்ந மணியணி பொன்மாலை செச்சை
கமழுமண மார்கடப்ப மணிவோனே
தருணமிதை யாமிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வு

தகைமை சிவஞானமுத்தி பரகதியு நீ கொடுத்து
தவிபுரிய வேணு நெய்த்த வடிவேலா
அருணதள பாதபத்ம மதுநிதமு மேதுதிக்க
அரிய தமிழ் தானளித்த மயில்வீரா
அதிசயம நேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழக திரு வேரகத்தின் முருகோனே.

---

சிவனார் மனக்குளிர உபதேச மந்த்ரமிரு
செவிமீதிலும் பகர் செய் குருநாதா
சிவகாம சுந்தரிதன் வரபால கந்தநின
செயலே விரும்பி யுளம் நினையாமல்
அவமாயை கொண்டுலகில் விருதா அலைந்துழலு
மடியேனை அஞ்சலென வரவேணும்
அறிவாகமும் பெருக இடரானதுந் தொலைய
அருள் ஞான இன்பமது புரிவாயே
நவநீதமுந் திருடி உடலோடெ யொன்றுமரி
ரகுராமர் சிந்தை மகிழ் மருகோனே
நவலோகமுங் கைதொழு நிசதேவ லங்கிருத
நலமான விஞ்சைகரு விநோவே
தேவயானை யங்குறமின் மணவாள சம்ப்ரமறு
திறல்வீர மிஞ்சுகதிர் வடிவேலா
திருவாவினன்குடியில் வருவேள் சவுந்தரிக
செகமேல் மெய்கண்ட விறல் பெருமாளே.

## கந்தர் அலங்காரம்.

நாளென் செயும் வினைதானென்செயு மெனை நாடிவந்த
கோளென் செயுங் கொடுங்கூற்றென் செயும் குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்கு முன்னே வந்து தோன்றிடினே.

சூலம் பிடித்தெம பாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்
காலன் றனக் கொருகாலு மஞ்சேன் கடன்மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான் குமார னறுமுகவன்
வேலுந் திருக்கையு முண்டே நமக்கொரு மெய்த்துணையே.

# கந்தர் அநுபூதி.

ஆடும் பரிவே லணிசேவலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனி யானை சகோதரனே.

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதா ணினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள்படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே.

சிந்தாகுல வில்லொடு செல்வ மெனும்
விந்தா டவியென் றுவிடப் பெறுவேன்
மந்தா கினிதந் தவரோ தயனே
கந்தா முருகா கருணா கரனே.

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவா யருள்வாய் குகனே.

(வேறு)

ஊரிலான் குணங்குறியிலான் செயலிலா னுரைக்கும்
பேரிலானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரிலான் வரல் போக்கிலான் மேலிலான் றனக்கு
நேரிலா னுயிர்க்கடவுள் யென்னுள்ளே நின்றான்.

அறுவித சமயத்தோர்க்கு மறுமுசச் சாமியாகி
செறிபரப் பிரமம் யாமேயென்று சின்மயிலேறிக்
குறுமுனிக் கருளிச் சிவக் குகைதோறும் வீற்றிருந்த
மறுவிலாக் குகனைப் போற்றி மாய்த்தனம் பிறவியெல்லாம்.

திட்டப்படாவினி யுன்றலென் சென்னி கறைப்பிறப்பில்
திட்டப்படாவிய வரல்லன் யான்றிக்கு நான் மருப்புத்
திட்டப்படாவித முகாசலன் சிறைவிட் டவன்றாள்
திட்டப்படாவி வினையே நினைவன்றிசா முகனே.

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
யேவருந் துதிக்க நின்ற வீராறு தோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே—யொருகை முகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கா லெப்பொழுது
நம்பியே கை தொழுவேனான்.

அஞ்சுமுகந் தோன்றின் ஆறுமுகந் தோன்றும்
வெஞ்சமரி லஞ்சலெனவே தோன்று—நெஞ்சில்
ஒருகால் நினைக்கி லிருகாலுந் தோன்று
முருகாவென் றோதுவார் முன்.

உன்னையொழிய வொருவரையு நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்—பன்னிருகை
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில் வாழ்வே.

---

## சோடச நாமங்கள்.

ஓம் ஸ்கந்தாய நம
ஓம் குஹாய நம
ஓம் ஷண்முகாய நம
ஓம் பாலநேத்ரஸுதாய நம
ஓம் ப்ரபவே நம
ஓம் பிங்களாய நம
ஓம் க்ருபாளவே நம
ஓம் சிவோஹனாய நம
ஓம் த்விஷட்புஜாய நம
ஓம் த்விஷண்ணேத்ராய நம
ஓம் பக்தவத்ஸலாய நம
ஓம் உமாஸுதாய நம
ஓம் க்ரௌஞ்சதாரணாய நம
ஓம் விசாகாய நம
ஓம் பார்வதிப்ரியநந்தனாய நம
ஓம் சர்வ ஸ்வாமினே நம
ஓம் ஸ்ரீசிவசுப்பிரமண்ய சுவாமினே நமோ நம
நாநாவித மந்த்ர பத்ரபரிமள புஷ்பாணி சமர்ப்பயாமி.

# வானங் காட்டும்
# வாழ்க்கைச் சித்திரம்

## (முதற் பாகம்)

## ஜீவன பாவம்

ஆசிரியன் : ஸி. பி. ஆனந்தம்

**பல அறிஞர்களின் சிறப்புரைகள் பெற்றது.**

இது ஜ்யோதிஷ பல பாகத்தின் நவீன விளக்கம். பல உதாரண ஜாதகங்களின் குறிப்புகளுடன் கூடியது. ஒருவர் தம்முடைய ஜீவன பாவ நிலைகளைப் பற்றித் தாமே பிறர் உதவியின்றி மிகச் சரியாய் நிர்ணயித்துக் கொள்ள உதவியாக வுள்ளது. வாழ்க்கைப் பாதைக்கு நல்வழி காட்டுவது.

விலை ரூ 2—8—0 (தபாற் சார்ஜ் வேறு.)

சொற்பப் பிரதிகளே அச்சிடப் பெறுவதால், அடியிற் கண்டவர்களுக்கு முன்பணம் அனுப்பி, உங்கள் பிரதிகளுக்குப் பதிவுசெய்து கொள்ளுங்கள்.

வேண்டுவோர்:—

'இரவி' காரியாலயம்,
2/106 சாமி நாய்க்கன் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.

கார்வரீர்–பு. சுப்பையா பிள்ளை,
நிர் 11, சிவன் கோயில் வடக்கு ரதவீதி,
தூத்துக்குடி.

சக்தி பிரசுராலயம்,
ராபர்ட்ஸன்பேட்டை, மைலாப்பூர், சென்னை.

# 'இரவி'

## (ஒவ்வொரு ஆங்கில மாதமும் 1-15 தேதிகளில் வெளிவருவது.)

உங்களுடைய எதிர்கால பலன்களை முன் கூட்டி அறிந்து-வருங்கால ஆக்கங்களுக்கு அடி கோலுவது; வாழ்க்கைப் பாதையில் எதிர்ப்படும் சிக்கல்களைப் போக்கி-செம்மை நலஞ் செய்வது. துறைகள் எல்லாவற்றிலுமுள்ள மக்கள் அனைவருக்கும் அவரவர் வழிகளில் ஒவ்வொரு வகையினும் தக்க துணையாவது.

இன்னும் மக்கள் விரும்பும ஒலி-ஒளிப்பகுதிகள்-தொடர் கதைகள்-நகைச் சுவைகள்-கலை ஆராய்ச்சி ஆகிய பலவும் தாங்கி யிருப்பது.

எனவே, இன்றே முன்பண மனுப்பி சந்தாதாரர்களாகச் சேர்ந்து கொள்ளுங்கள்.

வருடச் சந்தா ரூ. 3; பர்மாவுக்கு ரூ. 4; வெளிநாடுகளுக்கு ரூ. 5.

வி. பி, யில் அனுப்பப்படமாட்டா.

**மானேஜர்,**

'இரவி' ஆபீஸ், சிந்தாதிரிப்பேட்டை,

சென்னை.

## பிழை திருத்தம்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 10 | மகிமை | மகமை |
| 17 | 6 | உலவுகின்ற | உறைகின்ற |
| 23 | 1 | ஆண்டுகள | ஆண்டுகள் |
| 26 | 10 | அரங்கேற்று | அரங்கேற்றும் |
| 39 | 29 | அறிதிலேன் | அறிந்திலேன் |
| 44 | 23 | உடலிற | உடலிற் |
| 47 | 27 | தொன்றன்று | ஒன்றன்று |



Printed at the "Ananda Bodhini Press," Madras.